Regd. No. 2975.

ஸ்ரீ:

# SRI RAMANUJAN

*Editor*: P. B. ANNANGARACHARYA, L. KANCHEEPURAM.

23

# ஸ்ரீ ராமாநுஜன் 229

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சி. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 6 ஜீவியச் சந்தா ரூ. 116.

பேருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார்ஜீயர் திருவடிகளே சரணம்

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி *
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி * — ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி *
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1968 ஜனவரிமீ பிலவங்கஞு தைமீ

# ஸ்ரீ ராமாநுஜன் — 229



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசனஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர் : ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 20 | ப்லவங்களு தைமீ 1968 ஜனவரிமீ வெளியிடப்பட்டது. | ஸஞ்சிகை 1

## நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி—3.

(தஞ்சை மாமணிக்கோயில்.)

ஓதக்கேள் நெஞ்சே! உனக்குமிது நன்றெனக்கும்
மேதக்க நன்மையினி வேறில்லை —போதப்
பெருந்தஞ்சை மாமணியைப் பேணி வடிவம்
பொருந்தஞ்சை மாமணியைப் போற்று. (3)

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சே! ஓத கேள் | மனமே! உனக்கு நான் சொல்லுமிதனைக் கேளாய்; | போத பேணி | மிகவும் ஆதரித்து |
| இது உனக்கும் நன்று | நான் சொல்லுவதை ஆதரிப்பது உனக்கும் நன்மை பயக்கும்; | வடிவம் பொருந்து | அப்பெருமானது திருமேனியிற் பொருந்தியுள்ள |
| எனக்கும் மேதக்க நன்மை இனி வேறு இல்லை | சொல்லுகிற எனக்கும் மிகச் சிறந்த நன்மை இதற்கு மேல் வேறில்லை; | அஞ்சை | பஞ்சாயுதாழ்வார்களையும் |
| பெரு தஞ்சை மா மணியை | பெருமை பொருந்திய திருத் தஞ்சையில் வாழும் மாமணிப் பெருமானை | மா மணியை | சிறந்த ஸ்ரீ கௌஸ்துபமணியையும் |
| | | போற்று | துதிப்பாயாக. |

* * * 'தஞ்சை மாமணிக்கோயில்' என்று ப்ரஸித்தமான சோழநாட்டுத் திருப்பதியைப் பாடும் பாசுரமிது. "தஞ்ஜாபுரீ" என்னும் வடமொழிப் பெயர் தஞ்சையாயிற்று. 'நெஞ்சே! கேள்' என்றவிடத்துச் சிறியதோர் ஆராய்ச்சி கேண்மின். "மந: பூர்வோ

வாகுத்தர:" என்ற சுருதியின்படி நெஞ்சு நினைத்ததை வாய் சொல்லுமேயல்லது நெஞ்சின் உதவியின்றி வாய் சொல்லகில்லாது; ஆகவே, தம்மிற்காட்டில் வேறுபடாத நெஞ்சை வேறுபடுத்தி விளித்துச் சொல்லுவது அஸம்பாவிதமென்று நினைக்க நேரும். உண்மையில் நெஞ்சு தம்மிற்காட்டில் வேறுபட்டதன்றுதான்; ஆனாலும் *மந ஏவ மநுஷ்யாணாம் காரணம் பந்தமோக்ஷயோ:* என்று நூற்களில் மனத்திற்கு ஒரு ப்ராதான்யம் கொடுக்கப் பட்டுள்ளது. நம்மாழ்வார் திருவாய்மொழியில் *நெஞ்சமே! நல்லைநல்லை யுன்னைப்பெற்றால் என்செய்யோம்* என்றருளிச் செய்கிறார். *முயற்றிசுமந்தெழுந்து முந்துற்ற நெஞ்சே! இயற்றுவாயெம்மொடு நீகூடி* என்றே பெரிய திருவந்தாதியைத் தொடங்குகின்றார். நெஞ்சைத் தூதுவிடுவதும் ப்ரஸித்தமாகவுள்ளது. வடநூலாரும் *நபும்ஸகமிதி ஜ்ஞாத்வா தாம் ப்ரதி ப்ரேஷிதம் மந:, தத் து தத்ரைவ ரமதே ஹதா: பாணிநிநா வயம்* என்று விநோதமாகக் கூறுகின்றார்கள். இதெல்லாம் சமத்காரசாலியான வார்த்தைப்பாடு என்பர்.

நமது வேதத்தில் இரண்டாவது காண்டத்தில் ஐந்தாவது ப்ரச்நத்தில் வாக்குக்கும் மநஸ்ஸுக்கும் ஒரு விவாதமேற்பட்டதாக உபாக்கியானமொன்று ஓதப்பட்டுள்ளது. அதனைச் சுருக்கமாகக் கேளீர்; [வாக் ச மநச் ச ஆர்த்தியேதாம்] வாக்கும் மநஸ்ஸும் விவாதப்பட்டன. என்னவென்று? என்னில்; [அஹம் தேவேப்யோ ஹவ்யம் வஹாமீதி வாக் அப்ரவீத்] தேவதைகளுக்கான ஹவிஸ்ஸை நான் வஹிக்கிறேனென்று வாக்கு உரைத்தது. [அஹம் தேவேப்ய இதி மந:] மநஸ்ஸும் அவ்விதமாகவே சொல்லிற்று. விவாதம் ஓயவில்லை; [தௌ ப்ரஜாபதிம் ப்ரச்நமைதாம்] விவாதசாந்திக்காக இருவரும் ப்ரஜாபதியிடம் சென்று முடிவுகூற வேணுமென்று கேட்டார்கள். [ஸோப்ரவீத் ப்ரஜாபதி:] கேட்கப்பட்ட ப்ரஜாபதி முடிவு சொன்னார். என்ன சொன்னாரென்னில் [தூதிரேவ த்வம் மநஸோஸி; யத் ஹி மநஸா த்யாயதி தத் வாசா வததீதி.] வாக்கே! மநஸ்ஸுதான் மேன்மை பெற்றது; அதற்கு நீ பணிவிடை செய்யக் கடமைப்பட்டிருக் கிறாய்; மனஸ்ஸு நினைப்பதைத் தானே வாக்கு சொல்லமுடியும் என்று. இதற்கு மேலும் கதை சிறிது செல்லுகின்றது. அது நிற்க. மனஸ்ஸுக்கு ஒரு ப்ராதாந்யமுள்ள தென்பதை மட்டும் இந்த உபாக்கியானத்தினாலுணர்க.

வடிவில் பொருந்து அஞ்சை = எம்பெருமான் *நாந்தகம் சங்கு தண்டு நாணொலிச் சார்ங்கம் திருச்சக்கரமெனப்படுகிற பஞ்சாயுதங்களோடு கூடியவனாதலால் அந்த ஐம்படைகளையும் போற்றுமாறு சொல்லுகிறது. அன்றிக்கே எம்பெருமானுடைய ஸ்வரூபம் பரம் வியூஹம் விபவம் அந்தர்யாமி அர்ச்சை என ஐவகைப்பட்டிருத்தலால் அவ்வைந்தும் விவக்ஷிதமாகலாம். மாமணியை = *குருமாமணிப்பூண்குலாவித்திகழுந் திருமார்வனாகையாலே அத்திருமார்வில்திகழும் ஸ்ரீகௌஸ்துபமணியைச் சொன்னவாறு. 'அஞ்சையும் மாமணியையும்' என்று உம்மை கூட்டிக்கொள்ளத்தக்கது. மா—பிராட்டியு மாம். பூதத்தாழ்வாருடையவும் திருமங்கையாழ்வாருடையவும் மங்களாசாஸனம் பெற்ற தலமிது. ... ... ... ... (3)

முக்கியமான அறிவிப்பு:—சந்தா செலுத்தாதது காரணமாகப் பத்ரிகை நிறுத்தப் பெற்றவர்கள் 'எமக்குப் பத்ரிகை ஏன் அனுப்பப்படவில்லை?' என்று கேட்கிறார்கள். மேற்கொண்டு பத்ரிகையை விரும்பாவிட்டாலும் பாக்கியுள்ள சந்தாவைச் செலுத்த வேண்டியது அவசியம். (மானேஜர்.)

# புத்தாண்டு பிறப்பு.

நமது ஸ்ரீராமாநுஜன் பத்தொன்பது பிராயங்களை இனிது கழித்து இன்று இருபதாம் பிராயத்திற் புகுகின்றபடியால் இப்பிராயமும் மேன்மேலும் பிராயங்களும் இனிது செல்லவேணுமென்று எம்பெருமானையும் அவனடியார்களையும் இனிதிறைஞ்சித் தொழுதேத்தலாகிறது. இதன் அங்குரதசையே தொடங்கி எம்பெருமானுடைய நிர்ஹேதுககருணை யொன்றுதான் முக்கியமான அவலம்பமாகக் காண்கிறது. ஸ்வயமாகவே ப்ரஸரித்தவதனை நாம் ப்ரார்த்திப்பதென்பது தகுதியன்றாயினும் புருஷார்த்தமாகைக்காக ப்ரார்த்திக்கவும் ப்ராப்தம். நெடுநாளாகவே இதில் ஹ்ருதயபூர்ணமான அபிமானங் கொண்டிருக்கும் ஸஹ்ருதயர்கள் பக்கலிலும் நாம் பிரார்த்திக்கவேண்டியது ஏதுமில்லை.

அடியேனுடைய உடல்நலக்குறைவை அறிந்துள்ள ஆப்தர்கள் பலர் "உடலை நோக்கிக்கொள்ளவேண்டும்" என்று நேரில் சொல்லுவதும் ஸ்ரீமுகங்களில் எழுதுவது மாகவுள்ளார்கள். 'யாருடைய உடம்பை யார் நோக்கிக்கொள்வது' என்பதே அனைவர்க்கும் அடியேனுடைய உத்தரம். *தழைநல்லவின்பம் தலைப்பெய்து எங்கும் தழைக்கவே* என்றநுஸந்தித்து நிற்கிறேன். ... ... ... ❃

---

நம் ஸ்ரீ ராமாநுஜன் இருபதாவது பிராயத்தில் புகும் இந்த நன்னாளில்
ஸ்ரீ ராமாநுஜரைப்பற்றி

## இருபது விசேஷங்களை விஜ்ஞாபிக்கின்றது.

[இராமானுச நூற்றந்தாதியிலிருந்தும் யதிராஜஸப்ததியிலிருந்தும் யதிராஜவிம்சதியிலிருந்தும்.]

1. மாறனடிபணிந்துய்ந்தவிராமானுசனென்று நூற்றந்தாதி தொடங்குகின்றது. நம்மாழ்வாருடைய திருவடிகளைப்பணிந்து உஜ்ஜீவித்தவரென்று பொருள். அர்ச்சைகளில் எங்கும் நம்மாழ்வாருடைய திருவடிநிலைக்கு நாதமுனிகளென்றோ மதுரகவிகளென்றோ வ்யபதேசமின்றிக்கே ராமாநுஜனென்றே ஸார்வத்ரிகமான வ்யபதேசமிருப்பதுகொண்டு இதனையறுதியிடலாம். ஸ்ரீபாஷ்ய கீதாபாஷ்யாதிகளில் நம்மாழ்வாருடைய ஸ்ரீஸூக்தி களை யடியொற்றியே அர்த்த விசேஷ நிர்வாஹங்கள் செய்தருளியிருப்பதை அடியே னுடைய த்ரமிடோபநிஷத் ப்ரபாவஸர்வஸ்வத்தில் பரக்கக் காணலாம்.

2. நூற்றந்தாதியின் இரண்டாவது பாசுரத்தில் *குறையல் பிரானடிக்கீழ் விள்ளாதவன்பனிராமாநுசன்* என்று திருமங்கையாழ்வார் திருவடிகளில் அன்புமிக்க வரெனப்படுகிறது. நமது ஸம்ப்ரதாயத்தில் 'பராங்குச பரகால யதிவரர்கள்' என்கிற வ்யபதேசம் ப்ரஸித்தம். நம்மாழ்வார் திருமங்கையாழ்வார் எம்பெருமானார் ஆகிய இம்மூவர்க்கும் ஒரு சேர்த்தியை முன்னோர்கள் செய்து வைத்தார்கள். திருவரங்கம்

பெரியகோயிலில் திருவத்யயனோத்ஸவத்தில் இச்சேர்த்தியை இற்றைக்குங் காணலாம். மற்றையாழ்வாராசாரியர்கள் ஒரு கோவையாயிருப்பர்கள். இம்மூவரும் தனிச்சிறப்புத் தோன்ற நின்றுகொண்டிருந்து முந்துறமுன்னம் மரியாதை பெறுவர்கள். *மாறனடி பணிந்துய்ந்ததும் *குறையல் பிரானடிக்கீழ் விள்ளாதவன்பனுயிருந்ததும் ப்ரத்யக்ஷமாகக் காணலாயிருந்தது.

3. பேரியல் நெஞ்சே யென்கிற மூன்றும் பாசுரத்தில் அமுதனர் தம்பக்கலில் எம்பெருமானர்க்குப் பெருகின விசேஷ கடாக்ஷப்ரவாஹத்தைப் பேசுவது விலக்ஷண மாகவுள்ளது. அமுதனர் ஸாமாந்ய குலத்தில் பிறந்தவர். தமது தேஹபந்துக்களோடு கூடிவாழ்வதற்கு அவர்க்கு ருசியில்லாமையாலே ஒரு நாள் ஸ்வாமி பக்கலிலே வந்து "நீசனேனைத்திருத்தி இவ்விடத்திற்கு உரியேனும்படி ஸ்வாமி திருவடிவாரத்திலுள்ளாரில் ஒருவர்க்கு நியமித்தருளவேணும்" என்று விண்ணப்பஞ்செய்ய, உடனே ஸ்வாமி ஆழ்வானையழைத்து அமுதனரைக்காட்டி "இவர் கோயில்கொத்தி லுள்ளவர்கட்குத் தலைவராய் நம்முடைய வாழ்முதலான நம்பெருமாளுடைய ஸ்ரீகார்யத்துக்குப் பரிவராயிருப்பவரென்பது அறிவீரே; இவரது தாழ்வுகளைப் பாராமல் இவரையநுவர்த்தித்து அநுகூலராக்கி நம்மிடத்தே கொண்டுவந்து சேரும்" என்று நியமித்தருள, ஆழ்வானும் அவரை ஆறு மாதம் அநுவர்த்தித்துப் பரிபக்குவராக்கி ஸ்வாமி திருவடிகளிலே கொண்டு வந்து காட்டிக் கொடுக்க, அமுதனரை ஆழ்வான் திருவடிகளிலேயே ஆச்ரயிக்கச் செய்தருளினர் என்பது இதிஹாஸம். இது இப்பாசுரத்தில் அநுஸந்திக்கப்பட்டிருப்பது.

4. மேலெடுத்த மூன்றும் பாசுரத்தில் *இராமாநுச முனிக்கன்பு செய்யும் சீரிய பேறுடையாரடிக்கீழ் என்னைச் சேர்த்ததற்கு* என்று ஸாமான்யமாகச் சொன்னதில் த்ருப்தியடையாமல் *குரும் ப்ரகாசயேத் தீமாந்* என்ற கணக்கிலே தமக்கு ஸாக்ஷா தாசார்யரான கூரத்தாழ்வான் பெருமையை முன்னிட்டுக்கொண்டு எம்பெருமானரைத் துதிப்பது மொழியைக் கடக்கும் பெரும்புகழானென்று தொடங்கும் ஏழாவது பாசுரம். முக்குறும்பாவது—கல்விச் செருக்கு, செல்வச் செருக்கு, குலச் செருக்கு என்னுமிவை. இவையற்றவர் கூரத்தாழ்வானெருவரேயென்பது ப்ரஸித்தம்.

5. *தாழ்வொன்றில்லாவென்கிற பதினும் பாட்டில் *சூடிக்கொடுத்தவள் தொல்லருளால் வாழ்கின்ற வள்ளலிராமானுசன்* என்றவிடத்து *பெரும்பூதூர் மாமுனிக்குப்பின்னனுள் வாழியே* என்கிற ஆண்டாள்வாழி திருநாமத்திலடங்கியுள்ள இதிஹாஸம் அநுஸந்தேயம். அதாவது, *நாறு நறும்பொழில் மாலிருஞ்சோலை நம்பிக்கு நான், நூறுதடாவில் வெண்ணெய் வாய்நேர்ந்து பராவி வைத்தேன், நூறுதடா நிறைந்த அக்காரவடிசில் சொன்னேன்* என்ற ஆண்டாள் மனோரதத்தை (எம்பெருமானர்) நிறைவேற்றிவைத்து ஆண்டாள் பக்கலிலே பெற்ற பரிசு.

6. *முனியார் துயரங்கள் முந்திலும், இன்பங்கள் மொய்த்திடினும் கனியார் மனம்......எங்களிராமானுசனை வந்தெய்தினரே* என்கிற பதினேழாம் பாசுரத்தில் எம்பெருமானரடியார்களின் ஒரு பெருமை சொல்லும் மூகத்தால் ஒரு சிறந்த அத்யாத்மப் பொருள் ஸூசிதமாகிறது. எம்பெருமானரை ஆச்ரயித்த மஹான்கள் ஸுகதுக்கங்கள்

மேலிடுங் காலங்களில் மற்ற ஸம்ஸாரிகளைப்போலே ஹர்ஷ சோகங்களையடையாமல் எவ்வித விகாரமும் அற்றிருப்பர்கள் என்பது பாசுரத்தின் பொருள். ஸ்ரீபாஷ்யத்தில் பக்தி ஸாதனமாக எடுத்துக்காட்டப்படுகிற விவேக விமோக அப்யாஸ க்ரியா கல்யாண அநவஸாத அநுத்தர்ஷங்களென்கிற ஸப்தகத்தில் அநவஸாதமும் அநுத்தர்ஷமுமாகிற இரண்டுமிங்கு நிரூபிக்கப்பட்டனவாயின.

7. *அடையார் கமலத்தலர்மகள்கேழ்வனென்று தொடங்கியுள்ள முப்பத்து மூன்றும் பாசுரத்தில் எம்பெருமானுர் பஞ்சாயுதாழ்வார்களின் திருவவதார பூதராகத் தெரிவிக்கப்பட்டுள்ளார். இதையநுஸரித்து யதிராஜ ஸப்ததியிலும் *அப்ருதக் ப்ரதிபந்நயந்மயத்வைர் வவ்ருதே பஞ்சபிராயுதைர் முராரே:* என்று பணிக்கப்பட்டது. சேஷாவதார பூதரென்பது ப்ரமாண ஸித்தமாக இல்லையேயென்று சிலர் சங்கிப்பர்கள்: இவை ஸ்தோத்ர நூல்களேயொழிய சரித்திர நூல்களல்ல; திவ்யஸூரிசரிதம்; யதிராஜ வைபவம் முதலான சரித்திர நூல்களில் சேஷாவதாரத்வமே முக்கியமாகக் கூறப் பட்டிருப்பது காண்க. எம்முடைய சேஷாவதாரச் சிறப்பு நூலில் விரிவு காணத்தக்கது.

8. *படிகொண்ட கீர்த்தியிராமாயணமென்னும் பத்திவெள்ளங்குடிகொண்ட கோயிலிராமானுசன்* (37.) என்கிற பாசுரம்—ஸகல இதிஹாஸ புராணங்களுக்குள்ளும் ஸ்ரீராமாயணத்தில் ஸ்வாமி யெம்பெருமானுர்க்குண்டான அபிநிவேசாதிசயத்தைக் காட்டுகிறது; ஸ்ரீராமாயணத்திற்கு பக்திவெள்ள மென்றே திருநாமஞ்சாற்றினர் அமுதனுர். எம்பெருமானுர் வைபவத்தில், திருப்பதியிலெழுந்தருளியிருந்த தமது மாதுலரான திருமலைநம்பி டக்கலில் ஒரு ஸம்வத்ஸரகாலமிருந்து ஸ்ரீராமாயணுர்த்தம் கேட்டருளினதாகச் சொல்லியிருக்கையாலே அதுதனக்கு ப்ரகாசகமாகவே இப்பாசுரம் அவதரித்ததுபோலும்.

9. [*மண்மிசை யோனிகள்தோறும் பிறந்து.* என்கிற நாற்பத்தோராம் பாட்டில் எம்பெருமானுடைய அவதாரத்திற்காட்டிலும் எம்பெருமானுருடைய திருவவதாரம் மிகச் சிறப்புற்றதென்கிறுர். *அஜாயமாநோ பஹுதா விஜாயதே* என்றும் *உயிரளிப்பான் எந்நின்றயோனியுமாய்ப் பிறந்தாய் இமையோர் தலைவா* என்றுஞ் சொல்லுகிறபடியே எம்பெருமான் பலபல யோனிகளில் பலவகைப் பிறவி பிறந்து கண்காண வந்து நின்று உபதேசாதிகளாலே ஸ்வஸ்வரூபத்தைக் காட்டிக்கொடுத்த விடத்திலும் யாரும் அவனைப் பொருள் படுத்தவில்லை; *அவஜாநந்தி மாம் மூடா:* [மூடர்கள் என்னை அவமானப் படுத்துகிறுர்கள்] என்று தானே சொல்லிவருந்த வேண்டியதாயிற்று. ஆகவே பகவானுடைய அவதாரம் ஸம்ஸாரிகளினுடைய தெள்ளறிவுக்கு உறுப்பாகவில்லை. ஸ்வாமியின் திருவவதாரமோ வென்னில், மிக்க பயன் பெற்றது. இவர்தாம் திருவவதரித்தவுடனே எல்லாவுலகத்தாரும் ஆச்சரியமான ஞானத்தைப்பெற்று உஜ்ஜீவித்தார்கள்—என்பது இப்பாசுரத்தின் கருத்து.

10. *உணர்ந்தமெய்ஞ்ஞானியர் யோகந்தொறும் திருவாய்மொழியின் மணந்தரு மின்னிசை மன்னுமிடந்தொறும்* இத்யாதியான அறுபதாம் பாட்டில் ஸ்வாமி யெழுந்தருளியிருக்குமிடங்கள் அற்புதமாகச் சொல்லுகிறது. ஞானம் தலையெடுத்த

2

மஹான்களின் திரள் எங்கெங்கிருக்கிறதோ அங்கெல்லாமெழுந்தருளியிருப்பர்; திருவாய்மொழியின் பரமபோக்யமான இசை எங்கெங்கு நிகழ்கின்றதோ அங்கெல்லாம் ஸேவை ஸாதிப்பர்; ச்ரிய:பதியான ஸர்வேச்வரன் கோயில் கொண்டிருக்கும் திவ்யதேசங்கள் தோறும் புகுந்து நிற்பர்—என்கிறது இதில். "திருவாய்மொழியின் மணந்தருமின்னிசை மன்னுமிடந்தொறும்" என்றது இதில் பரமார்த்தமான வார்த்தையாகும். ஸ்வாமி திருவுள்ளமுகந்த பேச்சுக்களில் இது தலையானது.

11. *ஞானங்கனிந்த நலங்கொண்டு.* (66) இப்பாட்டு மிகமிக இன்சுவையுடையது. அடியார்களுக்கு மோக்ஷமளிக்கிற அதிகாரம் எம்பெருமானுக்கு மட்டுமன்று; எம்பெருமானாருக்கு முண்டு. ஆனால் எம்பெருமான் மோக்ஷமளிப்பது மிகவும் சிரமப்படுத்தியே; எம்பெருமானார் அளிப்பது தம்முடைய நிர்ஹேதுக கிருபையினாலே—என்கிறது இதில். இப்பாட்டின் திவ்யார்த்ததீபிகையுரையில் அடியேன் விரித்துரைத்துள்ளதை ஈண்டெடுத்துக் காட்ட விரும்புகின்றேன். (அதாவது) மோக்ஷமென்கிறவொரு சரக்கு எம்பெருமானென்கிற கடையிலும் எம்பெருமானாராகிற கடையிலும் கிடைக்கக் கூடியது; உலகில் கடைகளுக்கு மூன்று விதமான அஸௌகரியங்கள் இருக்கக்கூடும். அவையாவன—சரக்கின் விலையை மிகவும் ஏற்றிச் சொல்லுதல், அந்த விலையில் சிறிதும் குறைக்க இடம்தராமல் 'கறார் விலை' என்று கட்டளைப்படுத்துதல்; 'அதிக விலையும் கறார் விலையுமாயிருந்தாலும் தற்காலம் கடனாகக் கொடுத்தால் சில நாட்களில் விலை கொடுத்துவிடுவோம்' என்றால் அதற்கும் இசையாமல் 'கடன்கட்டில்லை; கைமேல் விலைகொடுத்தாகவேண்டும் என்று வற்புறுத்தல்—என்பனவாம். இவற்றுக்கெதிர்த்தட்டாக மூன்றுவகையான ஸௌகரியங்களுமுண்டு; லகுவான விலைக்கு விற்றல், கறார்விலை யென்னாமல் பேரம்பேச இடங்கொடுத்தல், கடனாகவுங்கொடுத்தல் என்பனவாம். முன்னே சொன்ன அஸௌகரியங்கள் நிரம்பிய கடையின் ஸ்தானத்தில் எம்பெருமானைக் கொள்ளவேணும். பின்னே சொன்ன ஸௌகர்யங்கள் நிரம்பிய கடையின் ஸ்தானத்தில் எம்பெருமானாரைக் கொள்ளவேணும். எங்ஙனேயெனின்; எம்பெருமான் மோக்ஷமாகிற சரக்குக்கு விலையை அபரிமிதமாக ஏற்றி விதித்துவைத்தான்—*ஞானங்கனிந்த நலங்கொண்டு நாடொறும் நையவேண்டுமென்கையாலே இந்த விலை எல்லாரும் எளிதாகச் செலுத்தமுடியாதாகையால் விலை அபரிமிதமென்பது தெரிந்தது. இதில் சிறிது குறைத்துக்கொள்ளலாமோ? என்றால் இசைகிறானில்லை; ஞானங்கனிந்த நலங்கொண்டு நாடொறும் நைபவர்க்கே வானங்கொடுப்பேனென்கிறான்; ஆகவே பேரம்பேச முடியாத தன்மையாயிருக்கிறது. இப்படிப்பட்ட நிலைமை இவ்விருள்தருமா ஞாலத்திலுண்டாவது அருமையாதலால் 'எங்களை முன்னாடி மோக்ஷத்திற்கு அனுப்பிவிடு, அங்குப்போய் இந்த விலையைச் செலுத்திவிடுகிறோம்' என்று கடன் வேண்டினால் அதற்கும் இசைகின்றிலன்; இங்கேயிருந்து ஞானங்கனிந்த நலங்கொண்டு நாடொறும் நைபவர்களைத்தான் மோக்ஷத்திற்கனுப்புவேனென்கிறான். ஆகவே எம்பெருமானென்கிற கடை மூன்று வகைப்பட்ட அஸௌகரியங்களும் நிரம்பியதென்பது தேறிற்று. எம்பெருமானாராகிற கடையில் இவ்வகையான அஸௌகர்யம் சிறிதுமில்லை. மோக்ஷமென்னும் சரக்குக்கு அவர் விலை விதிப்பதேயில்லையாதலால் அதிக விலையென்றாவது கறார்விலையென்றாவது ஊகவிலையென்றாவது சொல்லக்கூடிய கஷ்டங்களுக்கு இங்கு ப்ரஸக்தியே

யில்லை. கேவலம் தம்முடைய நிர்ஹேதுகக்ருபையினாலேயே திருத்தி முமுக்ஷுத்வத்தை யுண்டாக்கி மோக்ஷ ஸாம்ராஜ்யமும் அளித்தருளுகிறார். ஆனபின்பு, முமுக்ஷுக்களே! நீங்கள் மோக்ஷார்த்தமாக எம்பெருமானைப் பணிந்து வருந்தாமல் எம்பெருமானாரைப் பணிந்து ஸுகப்படுங்கள்—என்று இப்பாட்டால் உபதேசித்தாராயிற்று.

12, 13. *செய்த்தலைச் சங்கம் செழுமுத்தமீனும்* என்கிற (75 ஆம்) பாட்டிலும், *நின்றவண்கீர்த்தியும் நீள்புனலும்* என்கிற (76 ஆம்) பாட்டிலும்—ஸ்வாமியிடத்தில் *தேவுமற்றறியாத பக்திப்பெருங்காதல் தமக்குள்ளமையை அற்புதமாக வெளியிடுகிறார் அமுதனார். எம்பெருமான் தனது விலக்ஷணமான அழகைக் காட்டிக் கொண்டுவந்து என் கண்ணெதிரே நின்றாலும் என்னைவிடாதே வலியப்பற்றினாலும் அவனுடைய அழகில் நான் மோஹிக்கப்பெறுவதில்லை, தேவரீருடைய திருக்குணங்களே அடியேனை யீடுபடுத்துகின்றன—என்றார் முந்தினபாட்டில். இப்படி அமுதனார் தம்முடைய பரம பக்தியை விண்ணப்பம் செய்யக்கேட்ட எம்பெருமானார் மிகவும் உகந்தருளி 'இவ்வளவு அன்புகொண்ட இவர்க்கு நாம் எதைச் செய்வோம்!' என்று தெகுடாடியிருக்க, அதைக் கண்ட அமுதனார், 'ஸ்வாமிந்! அடியேனுக்கு தேவரீர் வேறெதுவும் செய்தருளவேண்டா; அடியேனுக்கு ஸர்வஸ்வமாகிய இந்தத் திருவடித்தாமரைகளைத் தந்தருள வேணுமென்கிறார் *நின்றவண்கீர்த்தியுமென்கிற அடுத்த பாட்டில். இப்பாட்டின் சீரிய பொருளைச் சிறிது விவரிப்போம்; திருமலையும் திருநாடும் திருப்பாற்கடலுமாகிய இத்தலங்களெல்லாம் ஸ்வாமிந்! தேவரீருக்கு எப்படிப்பட்ட ஆனந்தத்தை விளைக்குமோ அப்படிப்பட்ட ஆனந்தத்தை அடியேனுக்கு தேவரீருடைய திருவடிகள் விளைக்கும். *தெழிகுரலருவித் திருவேங்கடத்தெழில்கொள் சோதி யெந்தைதந்தை தந்தைக்கு ஒழிவில்காலமெல்லா முடனாய்மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டும் நாம்* என்று நம்மாழ்வார் பாரித்தாப் போலத் திருமலையப்பனுக்குக் கைங்கரியம் பண்ணவேணுமென்று அடியேன் விரும்ப வில்லை; நம்மாழ்வாருகந்த விஷயமென்று தேவரீருகந்திருக்கலாம். *மாகவைகுந்தம் காண்பதற்கு என்மனமேகமெண்ணு மிராப்பகலின்றியே* என்று ஆழ்வார் விரும்பின் திருநாட்டிலும் அடியேனுக்கு விருப்பமில்லை; அதையும் ஆழ்வாருகந்த திருநாடென்று தேவரீருகந்திருக்கலாம். *பொங்கிய பாற்கடல் பள்ளி கொள்வானைப் புணர்வதோராசை* என்று ஆண்டாள் விரும்பினாப்போலே திருப்பாற்கடல் நாதனோடு அணையவேணு மென்கிற விருப்பமும் அடியேனுக்கில்லை; அதனையும் நம் தங்கையுகந்த விஷயமென்று தேவரீருகந்திருக்கலாம். உண்மையில் அடியேனுகந்த விஷயம் எது வென்றால் 'எம்பெருமானார் திருவடிகளே சரணம்' என்பதொன்றேயாம். ஆனபின்பு அடியேனுக்கு இத்திருவடிகளையே சேமவைப்பாகத் தந்தருளவேணுமென்று ப்ரார்த்தித்தாராயிற்று. **

14. ஸ்ரீமங்கிகமாந்த மஹாகுருவின் யதிராஜ ஸப்ததியில் முதல் ஒன்பது ச்லோகங்கள் குருபரம்பராநுபவத்தில் சென்றன. 1. பெரிய பெருமாள், 2. பெரிய பிராட்டியார், 3. ஸேனை முதலியார், 4. நம்மாழ்வார், 5. ஸ்ரீமந்நாதமுனிகள், 6. உய்யக்கொண்டார், 7. மணக்கால்நம்பி, 8. ஆளவந்தார், 9. பெரியநம்பி—. ஆக, இப்படி குருபரம்பராநுபவம் செய்து தலைக்கட்டியபின் *ப்ரணமம் லக்ஷ்மணமுநி;* என்கிற ச்லோகம் முதலாக எம்பெருமானாருடைய குணாநுபவத்திலே இறங்கியுள்ளார்.

மேற்குறித்த ஆரம்ப ச்லோகத்தில் லக்ஷ்மணமுநிம் என்று ஸ்வாமியின் திருநாமத்தை வ்யபதேசித்தபடியினுல், ஸ்வாமிக்கு அமைந்த ராமாநுஜர் என்னுந் திருநாமம், தசரதாத்மஜனுன ஸ்ரீராமனுடைய தம்பியாகிய இளைய பெருமாளைக் குறிக்கொண்டதா மென்று விளக்கப்பட்டதாயிற்று. ராமாநுஜ னென்கிற திருநாமம், 'செம்பொற் கழலடிச் செல்வா பலதேவா!' என்னப்பட்ட நம்பிமூத்தபிரானென்னும் பலராமனுடைய தம்பியான கண்ணனையும் சொல்லக்கடவதென்பது முகுந்தமாலையில் *ஹேராமாநுஜ ஹே ஜகத்த்ரய குரோ ஹேபுண்டரீகாக்ஷ* என்கிற ஸுப்ரஸித்தமான ச்லோகத்தினுல் அனைவருமறிந்த தேயாம்; ஆகவே ஸ்வாமிக்கு அமைந்த ராமாநுஜரென்னுந் திருநாமம் கண்ணபிரானைக் குறிக்கொண்டதாகவும் கொள்வதற்கு இடமுள்ளது.

15. பலராமாநுஜனுக்கும் பகவத்ராமாநுஜனுக்கும் ஸாம்யம் நிர்வஹித்த சுலோகம் "சமிதோதய சங்கராதி கர்வ: ஸ்வபலாத் உத்த்ருதயாதவப்ரகாச:, அவரோபிதவாந் ச்ருதேரபார்த்தாந் நநு ராமாவரஜஸ் ஸ ஏஷ பூய:" என்பதான பதின்மூன்ருவது சுலோகம். இந்த அற்புதமான ச்லோகத்தில் மூன்று வகைகளினுல் கண்ணபிரானுக்கும் எம்பெருமானுர்க்கும் ஸாம்யம், ச்லேஷாலங்கார மர்யாதையினுல் அருளிச்செய்யப்பட்டுள்ளது. பல பொருள்படச் சொல்லுவது ச்லேஷம் [சிலேடை] எனப்படும். அது அபங்க ச்லேஷ மென்றும் ஸபங்க ச்லேஷமென்றும் இருவகைப்படும். பதங்களையொடித்துப் பொருள் கொள்ளவேண்டாமல் நாநார்த்தக பதங்களையிட்டுப் பல பொருள்களைப் பெறுவிப்பதானது அபங்க ச்லேஷமெனப்படும். அப்படியல்லாமல், பதங்களையொடித்துப் பல பொருள் கொள்ளுமாறு ப்ரயோகம் செய்வதானது ஸபங்க ச்லேஷமெனப்படும். இப்போது கொண்ட *சமிதோதய* என்னும் ச்லோக ரத்நத்தில் முதலிரண்டு பாதங்களில் அபங்க ச்லேஷம்; மூன்ருவது பாதத்தில் மட்டும் ஸபங்க ச்லேஷம். [சமிதோதய சங்கராதி கர்வ:] இது கண்ணனுக்கும் உடையவர்க்கும் பொதுவான விசேஷணம். 'சங்கரன் முதலானுருடைய செருக்கை யடக்கினவர்' என்பது இதன் பொருள். கண்ணபிரான் பரமாகப் பொருள்கொள்ளும்போது சங்கரன் என்பதற்குச் சிவபிரானென்று அர்த்தம். ஆதிபதத்தினுல் அப்பிரானைச்சேர்ந்த கார்த்திகையான் கரிமுகத்தான் முதலானுரை [ஸுப்ரஹ்மண்ய விநாயகாதிகளைக்] கொள்வது. கண்ணபிரான் பாணுஸுர யுத்தத்தில் சங்கரன் முதலானுருடைய செருக்கை யடக்கினது இதிஹாஸ புராண ப்ரஸித்தம். உடையவர் *சங்கர பாக்கர யாதவபாட்ட ப்ரபாகரர் தங்கள் மதஞ் சாய்வுற* என்றும் *கா சங்கா சங்கராதே:* என்றும் சொல்லுகிறபடியே, சங்கரகுரு ப்ரப்ருதிகளான புறமதத்தவர்களின் செருக்கைப் போக்கினவர் என்பது சரித்ர ப்ரஸித்தம். ஆகவே இந்த விசேஷணம் கண்ணனுக்கும் உடையவர்க்கும் ஸாம்யத்தை நிரூபித்ததாயிற்று.

16. [ஸ்வபலாத் உத்த்ருதயாதவப்ரகாச:] கண்ணபிரான் பரமான அர்த்தத்தில், யாதவர்களின் ப்ரகாசம் யயாதி சாபத்தினுல் மங்கிக்கிடக்கையில், "கோபாலோ யாதவம் வம்சம் மக்நமப்யுத்தரிஷ்யதி" என்கிறபடியே அந்த ப்ரகாசத்தைத் தனது வலிமையினுல் புநருத்தாரம் செய்தவன் என்று கொள்ளக்கடவது. யதுகுலத்திலே பிறந்து யாதவர்களை விளக்கமுறச் செய்தருளினவன் கண்ணபிரான் என்க. உடையவர்பரமான அர்த்தத்தில், 'யாதவப்ரகாச' என்று முழுச்சொல்லாகக்கொண்டு, அப்பெயர்பூண்ட மாயாவாதி குருவைத் தம்முடைய க்ருபாபலத்தினுல் உத்தரிப்பித்தவர் என்று கொள்க. முதலில்

தமக்கு உபாத்யாயராயிருந்த யாதவப்ரகாசரையும் தமக்கு அடிமைப்படுத்திக்கொள்ளும் படியான ப்ரபாவமுடையவர் எம்பெருமானுர் என்க. இவ்வரலாறு உடையவர் சரிதையில் விரிவாகக் காணத்தக்கது.

17. [அவரோபிதவாந் ச்ருதே: அபார்த்தாந்] 'அபார்த்தாந் ச்ருதே: அவரோபித வாந்' என்று அந்வயம். இதில் ஸபங்க ச்லேஷமுள்ளது. அபார்த்தாந் என்னும் பதம் (அ+பார்த்தாந்) என்றும் (அப+அர்த்தாந்) என்றும் பிரியும். பார்த்தனென்று அர்ஜுநனைச் சொல்லி, பார்த்தனல்லாத [அர்ஜுந விரோதிகளான] துர்யோதநாதிகளை அபார்த்தர்களென்று சொல்லுவதாகக் கண்ணன்பரமான அர்த்தத்தில் கொள்ளவேண்டும். ச்ருதியென்று கீர்த்திக்கும் பெயர்; வேதத்திற்கும் பெயர். கண்ணபிரான் அபார்த்தர் களான துர்யோதநாதிகளைக் கீர்த்தியிலிருந்து கீழேயிறக்கிவிட்டான்; பாண்டவ பக்ஷபாதி யாயிருந்து *மலைபுரைதோள் மன்னவரும் மாரதரும் மற்றும் பலர் குலைய நூற்றுவரும் பட்டழியச்செய்து அவர்களைக் கீர்த்தியிழந்தவர்களாகச் செய்தானென்றபடி. ஸ்வாமி ராமாநுஜரோவென்னில்: [ச்ருதே: அபார்த்தாந் அவரோபிதவாந்] இதர மதஸ்தர்கள் வேதங்களுக்குச் செய்த அபார்த்தங்களை ஸமீசீநார்த்த ப்ரதர்சநத்தினுல் நிரஸித்தருளினவர். ஆனதுபற்றியே *சமிதோதய சங்கராதி கர்வராக முதல் பாதத்தில் கூறப்பட்டாரென்று உணர்க. (உதய) என்பதில் உதயநாசார்ய விவக்ஷையுமுண்டு.

18. மணவாளமாமுனிகள் யதிராஜவிம்சதியில் இரண்டாவது ச்லோகத்தில் எம்பெருமானுரை ஹம்ஸமாகவும் வண்டாகவும் அருளிச்செய்துள்ளார். *ஸ்ரீரங்கராஜ சரணம்புஜராஜஹம்ஸம்* என்றும் *ஸ்ரீமத்பராங்குசபதாம்புஜப்ருங்கராஜம்* என்றும், (அதாவது) ஸ்ரீரங்கநாதனுடைய திருவடித்தாமரைகளிலே ராஜஹம்ஸமாயிருப்பவர்; நம்மாழ்வாருடைய திருவடித்தாமரைகளிலே சிறந்த வண்டாக இருப்பவர் என்று கூறிய வாறு. எம்பெருமானுர் *தென்னத்தியூரர் கழலிணைக்கீழ்ப் பூண்டவன்பாளன்* [இராமாநுச நூற்றந்தாதி-31] என்கிறபடியே தேவப்பெருமாள் திருவடிவாரத்திலே பேரன்பு பூண்டவராயிருந்தும் ஸ்ரீரங்கநாதனுல் விசேஷகடாக்ஷம் செய்தருளப்பெற்றுத் தென் திருவரங்கம் சென்று சேர்ந்து *யாவச் சரீரபாதம் அத்ரைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ* [இவ்வுடல் விழுந்தளையும் இந்தத் திருவரங்கம் பெரிய கோயிலிலேயே இனிது வாழக் கடவீர்—சரணுகதிகத்யம்-19.] என்று திருவரங்கச் செல்வனுரால் அநுக்ரஹிக்கப்பட்டு அப்பெருமானுடைய திருவடிவாரத்தின் கீழேயே இனிது வாழ்ந்தபடியினுல் ஸ்ரீரங்கராஜ சரணம்புஜ ராஜஹம்ஸம் என்றருளிச் செய்யலாயிற்று. இனி ஸ்ரீமத் பராங்குச பதாம்புஜ ப்ருங்கராஜம் என்ற விசேஷணத்தினுல்—ஸ்வாமி நம்மாழ்வாரது திருவடித்தாமரைகளிலே வண்டுபோல் படிந்திருப்பவரென்றது. ஆகவிப்படி ஸ்வாமியை ஹம்ஸமாகவும் வண்டாக வும் கூறினதிலிருந்து தேறுகின்ற ஸ்வாமியினது சில பெருமைகளை ஸ்வாபதேசார்த் தாநுபவப்ரணுளியாலே அநுபவிக்கிறேமிங்கு.

ஹம்ஸத்திற்குள்ள பல தன்மைகள் ஸ்வாமி பக்கலிலே குறையற்றிருக்கின்றன. எங்ஙனேயென்னில்; நீரையும் பாலையும் கலந்துவைத்தால் அவற்றைப் பிரிக்க வல்லமையுடையது ஹம்ஸம் என்று பிரமாணங்களினுலறிகின்றேம்; *ஹம்ஸோ யதா க்ஷீரமிவ அம்பு மிச்ரம்* என்பது முதலான வசநங்கள் காண்க. இதனுல் ஹம்ஸமானது

3

ஸாராஸாரவிவேகத்தில் மிகுந்த வல்லமையுடையது என்பது தேறும். ஸ்வாமி தாமும் *அஸாரமல்பஸாரஞ் ச ஸாரம் ஸாரதரம் த்யஜேத், பஜேத் ஸாரதமம் சாஸ்த்ரே* என்றபடி ஸாராஸாரஸங்குலமாயிருந்த சாஸ்திரங்களிலே அஸாரமாயும் அல்பஸாரமாயுமுள்ளவற்றை யெடுத்துத்தள்ளி மிகவும் ஸாரமானவற்றையே கைக்கொண்டவர். பாஹ்யமதங்களையும் குத்ருஷ்டி மதங்களையும் நிரஸித்து ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்ய உபயவேதாந்த ப்ரவர்த்தந ப்ரவீணரா யெழுந்தருளியிருந்து ரஹஸ்யார்த்தங்களில் பஹிரங்கமான அர்த்தங் களைத் தள்ளி அந்தரங்கமான அர்த்தங்களைக் கொண்டருளினர் என்பது இங்கு விவக்ஷிதம். அன்றியும், எம்பெருமான் வேதசாஸ்திரங்களை வெளியிடத் திருவுள்ளம்பற்றியபோது ஹம்ஸரூபத்தைப் பரிக்ரஹித்தருளினதாக சாஸ்த்ரங்களினாலறிகிறோம்; *அன்னமாய் நூல் பயந்தான்* என்றும் *அன்னமதாயிருந்து அங்கு அறநூலுரைத்த* என்றும் ஆழ்வார்களு மருளிச் செய்கிறார்கள். சாஸ்த்ரோபதேசத்திற்கு ஹம்ஸமாயிருத்தல் அவசியமாயினபடி யாலே சாஸ்த்ரங்களை யுபதேசித்தவர்களில் தலைவரான எம்பெருமானாரை ஹம்ஸமென்றது பொருத்தமே. ஹம்ஸத்தினுடைய இயல்வைச் சொல்லுமவர்கள் *ந பத்நாதி ரதிம் ஹம்ஸ: கதாசித் கர்தமாம்பஸி* என்கிறார்கள்; அதாவது ஹம்ஸம் ஒருகாலும் சேற்று நீரில் கால் பொருந்ாதென்றபடி. அப்படியேயன்றோ எம்பெருமானார்படியும். "அழுந்தார் பிறப்பாம் பொல்லாவருவினை மாய வன்சேற்றள்ளல் பொய்ந்நிலத்தே" என்று இந்த ஸம்ஸாரநிலமே சேற்றுநிலமாகச் சொல்லப்பட்டுள்ளது; இதில் கால் பொருந்தாத வர்களில் தலைவராயிற்று எம்பெருமானார். திவ்ய தேசங்களை வருணிக்கும்போது ஆழ்வார்கள் அன்னம் மாதர்களின் நடையைப் பின்சென்று நடப்பதாகக் கூறுகிறார்கள்; *பெடையோ டன்னம் பெய்வளையார்தம் பின்சென்று நடையோடியலி* என்று திருமங்கையாழ்வார் திருநறையூர்ப்பதிகமொன்றில் கூறியுள்ளது காண்க. ஸ்வாமிதாமும் அன்னநடையவணங்கான பிராட்டியினுடைய நடையைப் பின் செல்பவர். (அதாவது-) பிராட்டியின் நடையாவது நடத்தை; சேதநர்களைக் குறித்து எம்பெருமானிடத்தில் மன்றாடிப் பேறு பெறுவிப்பதே பிராட்டியினுடைய முக்கியமான நடத்தையாகும். அதை ஸ்வாமிதாமும் அநுஸரிக்கையாவது—தாமும் அப்படியே எம்பெருமானிடத்தில் மன்றாடி இன்றிருக்கும் நம்போல்வார்க்கும் பேறு பெறுவித்ததேயாம்.

19. இனி "ஸ்ரீமத் பராங்குச பதாம்புஜ ப்ருங்கராஜம்" என்று வண்டாக அருளிச்செய்ததின் பொருத்தங்களை நிரூபிப்போம். வண்டு மதுவ்ரத மென்று பேர் பெற்றிருக்கும். தேன்தவிர வேறொன்றைக் கொள்ளாது என்றபடி. அதுபோல, *உளங்கனிந்திருக்குமடியவர் தங்களுள்ளத்துளூறிய தேன்* என்றும் *தேனை நன்பாலைக் கன்னலையமுதை* என்றும் *எனக்குத் தேனே பாலே கன்னலே யமுதே* என்றும் பலவிடங்களிலும் தேனாகச் சொல்லப்பட்ட எம்பெருமானையே விரும்பி மற்றொன்றைக் கண்ணெடுத்தும் பாராமல் பகவதநுபவத்தையே விரதமாகக் கொண்டிருந்தவர் எம்பெருமானார். *வண்டினங்கள் காமரங்களிசைபாடும்* என்றும், *யாழினிசை வண்டினங்கள் ஆளம் வைக்கும்* என்றும், *வரிவண்டுதேதென வென்றிசைபாடும்* என்றும் பணித்தபடியே வண்டுகள் யாழினிசைபோன்ற இசைகளைப் பாடுவதுபோல *பண்ணார்பாடல் *யாழினிசைவேதம்* என்னப்பட்ட திருவாய்மொழியின் கானத்தையே போதுபோக்காகவுடையராயிருந்தவர் ஸ்வாமி. "தமிழ்மறைகளாயிரமும் மொய்ம்பால்

வளர்த்த இதத்தாய் இராமானுசன்" "பண்டருமாறன் பசுந்தமிழானந்தம் பாய்மதமாய் விண்டிட வெங்களிராமானுசமுனிவேழம்" என்றவை காண்க. வண்டு வடமொழியில் சஞ்சரீக மென்று பேர் பெற்றிருக்கும்; ஓரிடத்தில் தங்கியிராது; மதுவுள்ளவிடமெங்கும் பறந்து திரியுமது. அதுபோல் ஸ்வாமிதாமும் *ஸ்ரீரங்கம் கரிசைலமஞ்ஜநகிரிம் தார்க்ஷ்யாத்ரி ஸிம்ஹாசலௌ ஸ்ரீகூர்மம் புருஷோத்தமஞ் ச பதரீநாராயணம் நைமிசம், ஸ்ரீமத்த்வாரவதீ ப்ரயாக மதுராயோத்யா கயா: புஷ்கரம் ஸாலக்ராமகிரிம் நிஷேவ்ய ரமதே ராமாநுஜோயம் முநி:* என்கிறபடியே *பதியே பரவித்தொழுந்தொண்டர்களில் தலைவராயிருந்தார். வண்டு எந்த ஸமயத்தில் எங்குச் செல்லவேணுமென்று நினைத்தாலும் தட்டுத் தடங்கலின்றியே புகுந்து ரமிக்கும்; ஸன்னிதியில் கர்ப்பக்ருஹங்களினுள்ளும் எம்பெருமான் திருமுடிமீதும் தாராளமாகப் புகக் காணுகின்றோம். அதுபோல, *பின்னிட்ட சடையானும் பிரமனு மிந்திரனும் துன்னிட்டுப் புகலரிய* என்னும்படி திருவாசல்களிலே ஸேவாபரரானவர்கள் நிறைந்து தலை நுழைக்கவொண்ணாதபடி நெருக்க, *மன்னிய தென்னரங்காபுரி மாமலை மற்றும் உவந்திடுநாள்* என்னும்படியவதரித்தருளின எம்பெருமானார் கோயில் திருமலை பெருமாள் கோயில் முதலான எந்த திவ்யதேசங்களிலும் தடையும் சங்கையுமின்றிக்கே அதிகாரச் செல்வத்துடனே உள்ளே புகுந்து ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலா வடிமைசெய்து வாழ்ந்தவர். வண்டு சோலைகளிலேயே சுழலமிடும்; எம்பெருமானார் தாமும் *ஆராமஞ் சூழ்ந்தவரங்கம்* சிந்து பூ மகிழுந்திருவேங்கடம்* *விரையார்பொழில் வேங்கடம்* என்னும்படியாகச் சோலைகள் மிக்க தலங்களிலேயே சுழலமிட்டவர். இப்படி மற்றும் பல பொருத்தங்களும் காண்க.

20. வண்டுக்கு த்விரேப மென்று பெயர்; இரண்டு ரேபங்களையுடையது என்றபடி. ரேபமாவது ரகரம். வண்டுக்கு வாசகமான (ப்ரமர) சப்தத்தில் இரண்டு ரேபமிருப்பதால் இது பற்றியே (வண்டு) த்விரேபமெனப்பட்டது. ஸ்ரீ ராமாநுஜராகிற வண்டானது தன்னிடத்தில் இரண்டு ரேபமில்லையேயென்கிற குறையைத் தீர்த்துக் கொள்வதற்காகவே வாவர முனிகளாக மற்றோரவதாரம் செய்தருளினபடி. ராமாநுஜத் திருநாமத்தில் ஒரு ரேபமேயாய், வரவர முனிதிருநாமத்தில் இரண்டு ரேபமிருக்கும்படி கண்டுகொள்வது. ... ... ...

## ப்ரஸங்காத் அமுதனாருடைய பெருமையைப் பேசுவோம்.

உலகுக்கெல்லாம் ஒருயிராய் ஆரியர்கட்கெல்லாம் ஆரியரான எம்பெருமானார் விஷயத்தில் கவிபாடின புலவர்கள் பலர் இருந்தாலும், அவர்களுள் திருவரங்கத்தமுதனா ரென்னுமாசிரியர்க்குண்டான ஏற்றம் ஒப்புயர்வற்றதாகும். மணவாளமாமுனிகளின் திருவடிகளைப் பணிந்து உய்ந்தவரான எறும்பியப்பாவின் பெருமையைச் சொல்லவந்த ஒரு ச்லோகம் உலகில் ப்ரஸித்தமானது; அதாவது—"சடரிபுரேக ஏவ கமலாபதிதிவ்ய கவி; மதுரகவிர் யதா ச சடஜிந்முநிமுக்யகவி:, யதிகுலபுங்கவஸ்ய புவி ரங்கஸுதா

கவிராட் வரவரயோகிநோ வரதராஜகவிச் ச ததா.'' என்பதாம். இதன் பொருள் யாதெனில், திருமகள் கொழுநனை ஸர்வேச்வரனைக் கவிபாடித் துதித்தவர்களுள் நம்மாழ்வார் எப்படி சிறப்புப் பெற்றவரோ, அந்த நம்மாழ்வாரைக் கவிபாடித் துதித்தவர்களுள் ஸ்ரீ மதுரகவிகள் எப்படி சிறப்புப் பெற்றவரோ, எம்பெருமானாரைக் கவிபாடித் துதித்தவர்களுள் திருவரங்கத்தமுதனார் எப்படி சிறப்புப்பெற்றவரோ, அப்படியே மணவாளமாமுனிகளைக் கவிபாடித் துதித்தவர்களுள் எறும்பியப்பா சிறப்புப் பெற்றவர்—என்பதாம். உண்மையில், எம்பெருமானாருடைய திருக்குணங்களைப் புகழ்ந்து பேசப்பிறந்த நூல்களுள் திருவரங்கத்தமுதனார் திருவாய்மலர்ந்தருளிய இராமானுச நூற்றந்தாதிக்கு இணையானது எதுவுமில்லையென்று சபதமிட்டுரைப்பர் பெரியோர். சொல்நோக்கும் பொருள்நோக்கும் தொடைநோக்கும் நடைநோக்குமாகிய எந்நோக்கும் மிக அற்புதமாக வன்றோ நூற்றந்தாதியில் அமைந்துள்ளது.

அமுதனாருடைய வரலாற்றைப்பற்றிச் சிறிது பேசுவோம். இவர் பங்குனித் திங்களில் ஹஸ்த நக்ஷத்திரத்தில் மூங்கிற்குடியென்னும் சிறந்த திருவம்சத்தில் தோன்றித் திருவரங்கம் பெரியகோயிலில் இருந்துவந்தார். பெரியகோயில்நம்பி யென்று முதலில் இவர்க்கு ப்ரஸித்தி இருந்துவந்தது. அஷ்டப்பிரபந்தம் செய்தருளினவரும் பட்டர் திருவடிகளில் ஆச்ரயித்து உய்ந்தவருமான பிள்ளைப்பெருமாளையங்கார்க்கு இவர் திருத் தகப்பனாரென்று சிலரும் பாட்டனாரென்று சிலரும் சொல்லுவர். அமுதனார் கூரத்தாழ் வானையடிபணிந்து உஜ்ஜீவித்துவரும் நாளில், ஆழ்வானுடைய திருவுள்ளவுகப்புக்காக ப்ராசார்யரான எம்பெருமானார் விஷயமாகச் சில பிரபந்தங்கள் இயற்றவேணுமென்னும் அவா இவர்க்கு உண்டாக, ஒன்றிரண்டு பிரபந்தங்களைச்செய்து அவற்றை எம்பெருமானார் ஸன்னிதியிலே கொண்டுவைத்தார். எம்பெருமானாரும் அவற்றை அவிழ்த்துக் கடாக்ஷிக்க, அவை தம் திருவுள்ளத்திற்கு இசைந்திராமையாலே உபேக்ஷித்திருந்தார். அப்படி ஸ்வாமி திருவுள்ளத்தில் வெறுப்பு உண்டானதற்கு யாது காரணமென்று இவர் விமர்சிக்கையில், தாம் இயற்றிய பிரபந்தம் ஸ்வாமி திருவுள்ளத்திற்குப் பாங்காக அமைந்திலது என்று தெரிந்துகொண்டார். ஸ்வாமி கற்ற கல்விகளின் விரிவையும் அவர் பாஹ்யகுத்ருஷ்டி மதங்களைக் களைந்தொழித்து வெற்றிபெற்ற வரலாறுகளையும் பரக்கப் பேசியிருந்தாராம் அப்பிரபந்தத்தில். ஆழ்வார்கள் பக்கலிலும் அவர்களது ஈரச் சொற்களிலும் ஸ்வாமிக்கு இருந்த ஈடுபாடு மிகவும் சுருக்கமாகச் சொல்லப்பட்டிருந்ததாம். இத்தகைய துதிவகையில் ஸ்வாமி திருவுள்ளம் சிறிதும் உகப்புக் கொள்ளவில்லையென்று தெரிந்த பின்னர், அவர்தம் திருவுள்ளத்திற்குப் பாங்காக வேறொரு பிரபந்தத்தைப் பணித்துத் திருவடி வாரத்தில் கொணர்ந்து ஸமர்ப்பித்தார். இப்போது அநுஸந்தானத்திலுள்ள இராமாநுசநூற்றந் தாதியே அது.

ஸ்வாமி அதனைக் கடாக்ஷித்தருளிப் புன்முறுவல் கொண்டிருந்தார். அப்போது ஆழ்வான் ஆண்டான் எம்பார் முதலான அந்தரங்கசிஷ்யர்கள் யாவரும் அப்பிரபந்தத்தை ...ற நோக்கி, அதில் ஸ்வாமியின் திருவுள்ளவுகப்பையும் விசேஷித்தறிந்து மிக்க குதூஹலங்கொண்டு. ''இப்பிரபந்தம் ஆழ்வார்களின் திவ்யப்ரபந்தங்களோடொக்கப் பரிக்ராஹ்யமாம்படி நியமித்தருளவேணும்'' என்று திருவடிகளைப் பிடித்துக்கொண்டு

பிரார்த்திக்க, ஸ்வாமி அதற்கு ஸஹஸா இசைந்தருளவில்லை. குசலவர்கள் பாடினதை ஸ்ரீராமபிரான் கேட்டருளி மிகவுமுகந்து "மமாபி தத் பூதிகரம்" என்று கொண்டாடின வரலாற்றை எடுத்துரைத்து அனைவரும் நிர்ப்பந்திக்க, இத்தனை பேருடைய குதூஹலத்திற்கு நாம் பங்கம் விளைக்கலாகாதென்று ஸ்வாமி திருவுள்ளம்பற்றி, அழகியமணவாளனுடைய நியமனத்தையும் பெற்று அப்படியே நியமித்தருளினர். ஸ்வாமி எழுந்தருளியிருந்த காலத்திலேயே இப்பிரபந்தம் ஸன்னிதிகளிலும் திருமாளிகைகளிலும் ஸேவிக்க உபக்ரமமாயிற்று. திருக்கார்த்திகைக்குப் பிறகு அநத்யயநக்ரமம் திவ்யப்பிரபந்தங்களுக்குப் போலவே இந்த நூற்றந்தாதிக்கும் அன்றுதொட்டு எங்கும் நிகழ்ந்து வரக்காண்கையாலே இதற்கு திவ்யப்ரபந்தத்தோடு ஸர்வாத்மநா ஸாம்யம் பூர்வாசார்ய ஸம்மதமாயிற்றென்பது அறியத்தக்கது.

உபதேச ரத்தினமாலையில் கண்ணிநுண்சிறுத்தாம்பை ப்ரஸ்தாவித்து *வாய்த்த திருமந்திரத்தின் மத்திமமாம் பதம்போல், சீர்த்தமதுரகவி செய்கலையை—ஆர்த்தபுகழ் ஆரியர்கள் தாங்கள் அருளிச் செயல் நடுவே, சேர்வித்தார் தாற்பரியந் தேர்ந்து* என்றருளிச் செய்த மணவாளமாமுனிகள் இராமானுச நூற்றந்தாதியைப்பற்றி ஒன்றுமருளிச் செய்யாததேன்? திருவரங்கத்தமுதனார்க்கு நாள் பாட்டும் பணிக்கவில்லையே, ஏன்? என்று சிலர் கேட்பதுண்டு. ஸன்னிதிகளில் விக்ரஹப்ரதிஷ்டை பெற்றிருந்தவர்களுக்கே நாள் பாட்டு அருளிச்செய்யலாயிற்றென்பது ஸாரமான ஸமாதானம்.

நூற்றந்தாதிக்கும் அமுதனார்க்குமாகவே உபதேச ரத்தினமாலையில் *இன்றுலகீர் சித்திரையிலேய்ந்த திருவாதிரை நாள்* என்று தொடங்கி மூன்று பாசுரங்கள் அருளிச் செய்தது. திருக்குருகைப்பிரான்பிள்ளான், நஞ்சீயர், பெரியவாச்சான்பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை, பிள்ளை லோகாசார்யர் முதலான ஆசார்யர்களைப் பற்றியும் உபதேச ரத்தினமாலையில் ப்ரசம்ஸையிருந்தாலும் அவர்கள் அவதரித்தமாதமோ நக்ஷத்ரமோ அதில் பேசப்படவில்லை. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தங்கள் பணித்தவர்களுக்குமாத்திரமே *மாதங்கள் நாள்கள்தமை மண்ணுலகோர்தாமறிய ஈதென்று சொல்லியுள்ளார். அந்த வரிசையில் "சித்திரையில் செய்ய திருவாதிரை" என்று நாள் பாட்டு அமைத்திருப்பதை ஆழ்ந்து நோக்கவேணும். திவ்யப்பிரபந்தமருளிச்செய்யாத எம்பெருமானார்க்கு மதுரகவி கட்டளைப்படியாக நாள் பாட்டு அமைத்தது இராமானுச நூற்றந்தாதிக்காகவேயென்பது சொல்லவும் வேண்டுமா? எம்பெருமானார்க்கேயிறே விக்ரஹப்ரதிஷ்டையுள்ளது.

நாலாயிரத்திற்கும் வியாக்கியானஞ் செய்தருளின பெரியவாச்சான் பிள்ளை நூற்றந்தாதிக்கு ஏன் வியாக்யானஞ் செய்தருளவில்லையென்று சிலர் விமர்சிப்பதுண்டு. ஸ்தோத்ரரத்நத்திற்கு வியாக்யானஞ் செய்தருளினவர் பஞ்சஸ்தவாதிகளுக்கு வியாக்கியானஞ் செய்தருளவில்லையென்பதனால் ஒரு குறையில்லையே, அதுபோலவே யிங்குமென்று ஸமாஹிதராகலாம். அமுதனாருடைய திருவம்சத்திலொருவர் நூற்றந்தாதிக்கு வியாக்கியானமிட்டிருந்தாரென்றும், அது லோபித்ததனால் மணவாளமாமுனிகள் வியாக்கியானித்தருளினரென்றும் கேட்டிருந்ததுண்டு.

நூற்றந்தாதியின் திருவவதாரத்தைப்பற்றி மற்றொருவிதமான ஐதிஹ்யமும் பெரியார் பக்கலில் கேட்டிருந்ததுண்டு; எங்ஙனே யெனின்; அமுதனார் இப்பிரபந்தம் இட்டருள்வதாக அடையவளைந்தான் திருமதிலுக்கு இவ்வருகேயிருந்த ஒரு தென்னஞ்

சோலைத் திருமண்டபத்தில் வீற்றிருந்து பட்டோலை கொண்டிருக்கும்போது எம்பெருமானார்தாம் கூரத்தாழ்வான் முதலான சில அந்தரங்க சிஷ்யர்களோடு அவ்விடத்தே யெழுந்தருளினாராம்; அப்போது *செழுந்திரைப்பாற்கடல் என்கிற நூற்றைந்தாம் பாசுரம் தலைக்கட்டி *இருப்பிடம் வைகுந்த மென்கிற பாசுரம் எழுத வேண்டிய தருணமாயிருந்ததாம்; அது முதலான மூன்று பாசுரங்களும் எம்பெருமானார் திருமுன்பே தொடுக்கப்பட்டனவாம். பிறகு அரங்கேற்றியானபின் "இந்த விசேஷத்திற்கு ஸ்மாரகமாக இப்பிரபந்தத்திற்கு மாத்திரம் சாற்றுப்பாசுரங்கள் மூன்றுயிருக்கட்டும்" என்று ஆழ்வான் நியமித்தருளினாராம். ஆனதுபற்றியே மற்றைப் பிரபந்தங்களுக்கு இரண்டு பாசுரம் சாத்துப்பாசுர மாயிருப்பது போலல்லாமல் இப்பிரபந்தத்திற்கு மூன்று பாசுரம் சாத்துப்பாசுரமாக ஸம்ப்ரதாயம் நிகழ்கின்றது—என்று. இவ்வைதிஹ்யம் *இருப்பிடம் வைகுந்த மென்கிற பாட்டின் ப்ரமேயத்திற்கு மிகவும் பொருந்தியிருக்கும்.

இந்த நூற்றந்தாதிபோல் மற்றும் பல பிரபந்தங்களும் ஸ்வாமி விஷயமாகத் திருவவதரித்திருந்தனவென்பது இதுதன்னில் ஆறுவது பாசுரத்தினால் அறியலாகிறது: "இயலும் பொருளுமிசையத் தொடுத்து ஈன்கவிகளன்பால் மயல்கொண்டு வாழ்த்து மிராமானுசனை" என்றது காண்க. அப்படிப்பட்ட பிரபந்தங்களெல்லாம் பகல்விளக்கும் மின்மினியுமாகி இப்பிரபந்தமொன்றே சிறப்புற்று விளங்குவதற்குக் காரணம் இதிலுள்ள சப்தகாம்பீர்யமும் அர்த்த புஷ்டியுமாகும்.

ஸ்வாமி காலத்திலே ஸ்வாமி நியமனங்கொண்டே கருட வாஹன பண்டிதர் பணித்த திவ்யஸூரிசரிதத்தில் பதினெட்டாம் ஸர்க்கத்தில் (51.)

"ஸ்ரீரங்காம்ருதகவிராஹ ரங்கிப்ருத்ய: தச்சிஷ்யோ யதிபதிவைபவாநுபந்தம்,
அந்தாதித்ரமிடகிரா மஹாப்ரபந்தம் கரதாநாம் அம்ருதமுசாம் யுதம் சதேந."

என்னும் ச்லோகத்தில் இப்பிரபந்தத்தின் பெருமை பேசப்பட்டுள்ளது. இதன் பொருளாவது, திருவரங்கத்தமுதனார் அமுதப்பெருக்கான தமிழ் மொழிபாலே எம்பெருமானாருடைய வைபவங்களைப் பேசுகிற நூற்றந்தாதி ப்ரபந்தத்தை யருளிச் செய்தாரென்பதாம்.

இந்நூற்றந்தாதியில், ஸ்வாமிக்கு ஆழ்வார்கள் பக்கலிலும் ஆசாரியர்கள் பக்கலிலுமிருந்த ப்ராவண்யாதிசயம் மிக அற்புதமாகப் பேசப்பட்டிருக்கின்றது. பாசுரம் தொடங்கும்போதே *மாறனடி பணிந்துய்ந்தவன்* என்றும், உடனே *குறையல் பிரானடிக் கீழ் விள்ளாதவன்பனி ராமானுசன்* என்றும் அருளிச் செய்தது ஸ்வாமியின் உண்மையான வைபவத்தை விளக்குகின்றது. பொய்கையார் பூதத்தார் முதலான ஒவ்வோராழ்வார் திறத்திலும் ஸ்வாமிக்கிருந்த பக்தியின் கனம் பல பாசுரங்களினால் பேசப்பட்டிருக்கின்றது. விசேஷித்து, நம்மாழ்வார் பாசுரங்களையும் திருமங்கையாழ்வார் பாசுரங்களையுங்கொண்டே ஸ்வாமி வாழ்ந்தருளினாரென்பது இப்பிரபந்தத்தில் அடிக்கடி காட்டப்படுகிறது. (19.) *உறுபெருஞ் செல்வமும்* (29.) *கூட்டும் விதியென்று கூடுங்கொலோ* (46.) *கூறுஞ்சமயங்களாறுங்குலைய* (54.) *காட்டிய நீசச்சமயங்கள் மாண்டன* (64.) *பண்டருமாறன் பசுந்தமிழ்* (88.) *கலிமிக்க செந்நெல் கழனிக் குறையல்* என்கிற பாசுரங்கள் விசேஷித்து நோக்கத் தக்கன. ஸ்ரீமந்நாதமுனிகள், ஆளவந்தார் முதலான பரமாசார்யர்கள் திறத்தில் ஸ்வாமிக்கிருந்த பத்திப் பெருங்காதல் 20, 21 முதலான சில பாசுரங்களில் பேசப்பட்டது. கோயில் திருமலை பெருமாள் கோயில் முதலான திவ்ய தேசங்களிலுண்டான ஆதராதிசயம் 31, 35, 42, 47, 49, 76, 81, 91, 106 முதலான பாசுரங்களில் பேசப்பட்டுள்ளது. ...

# நினைவுக்குவருவன நவிலக்கேளீர்

## (4)

அடியேனுக்கு ஸ்ரீபதரிகாச்ரம பர்யந்தமான வடநாட்டு யாத்திரை பலமுறை கிடைத்திருக்கிறதென்று பலகால் விஜ்ஞாபித்திருக்கின்றேன். ஸாளக்ராம க்ஷேத்ர யாத்திரை ஒரு பர்யாயங்கூட நேர்ந்ததில்லை. ஆனால் சென்று ஸேவிக்க வேணுமென்கிற குதூஹலம் மிகமிக வுண்டு. ஸாளக்ராமம் போகிறவழியில் காட்மண்டு என்பதொரு ஸ்தலமுள்ளது. அவ்விடத்திலே வஸிப்பவரான ஒரு மஹந்து எனக்கு அபரிசிதராயிருந்தும் தாமாகவே எனக்கு அடிக்கடி கடிதங்கள் எழுதிக்கொண்டிருந்தார். ஸாளக்ராமம் வந்து ஸேவிக்க வேண்டுமென்று ஒவ்வொரு கடிதத்திலும் எழுதிக்கொண்டிருந்தார். காட்மண்டுவரையில் எளிதாக வந்து விடலாமென்றும், அவ்விடம் வந்து விட்டால் அங்கிருந்து தாம் ஸாளக்ராம யாத்திரையை ஸௌக்கியமாக நடத்திவைக்க முடியுமென்றும் மாதந்தோறும் சோம்பாது எழுதிக்கொண்டிருந்தார். இது முப்பது வருடங்களுக்கு முற்பட்ட செய்தியைத் தெரிவிக்கிறபடி. அந்த ஸமயத்தில் பல மாதங்கள் அவர்க்கு நான் பதில் எழுதாமலேயிருந்து விட்டேன். அதனால் அவர் மிகவும் பரிதபித்து முன்னடி தெரிவிப்பதும் செய்யாமலே நேராகக் காஞ்சிபுரம் வந்தார். அன்று நான் சென்னையில் உபந்யாஸத்திற்காக வந்திருந்தபடியால் அதைத் தெரிந்துகொண்டு உடனே இவர் காஞ்சியில் நின்றும் புறப்பட்டு சென்னை வந்து சேர்ந்து உபந்யாஸ ஸபைக்கும் வந்து சேர்ந்து ஒருபுறமாக உட்கார்ந்து கொண்டார். இவரை நான் முன்பு பார்த்ததில்லை யாதலால் இவரை இன்னாரென்று தெரிந்துகொள்ளாமலிருந்தேன். ஸ்ரீபெரும்பூதூர், திருமழிசை முதலானவிடங்களிலுள்ளாரில் இவரொருவர் என்றும் நினைத்துவிட்டேன். உபந்யாஸ முடிவில் இவர் எழுந்து அருகே வந்து ஸ்ரீஸாளக்ராமத் திருமூர்த்திகள் நிரம்பியிருந்தவொரு சிறு பெட்டியைக் கையிலே கொடுத்து நமஸ்கரித்து நின்றார். நீர் யார்? எவ்விடம்? என்று ஹிந்தியில் விசாரிக்கையில், அவருக்கு நான் எழுதியிருந்த கடிதங்களை ஒன்றுவிடாமல் அவர் என் கையில் கொடுத்து ஒன்றும் பேசாமலே நின்றார். உடனே அவரை நான் இன்னாரென்று தெரிந்துகொண்டு 'திடீரென்று இவ்விடம் வந்த காரணமென்ன?' என்று வினவினேன். அவர் கண்ணீர் பெருகநின்று "பல மாதங்களாய் ஸ்வாமி அடியேனை உபேக்ஷித்திருக்கும் காரணம் தெரியவில்லை; நேரில் பிரார்த்தித்து ஸாளக்ராம க்ஷேத்ரத்திற்கு எழுந்தருளப் பண்ணிக் கொண்டு போவதற்காகவே வந்தேன். இது நல்ல ஸமயம். ஒரு வாரத்திற்குள் அவசியம் புறப்பட்டு எழுந்தருளவே வேணும். இந்த யாத்திரைக்காக ஆகும் செலவுகளெல்லாம் என்னுடையவை; ஒன்றும் ஆலோசியாமல் புறப்படவேணும். இந்த ஸபையிலேயே வாக்தானம் செய்யவேணும்" என்றார். அப்போது உபந்யாஸ கோஷ்டி கலையவில்லை. யாவரும் உட்கார்ந்துகொண்டேயிருக்கிறார்கள். இவ்வளவையும் செவியுற்று அதிசயப்படுகிறார்கள். பிறகு நான் அவரைக் கேட்கின்றேன்—எனக்கு ப்ராப்தமாகவேண்டிய ஸ்ரீஸாளக்ராம யாத்திரையைப்பற்றி உமக்கு ஏதுக்காக இவ்வளவு விசாரம்?" என்றேன். அதற்கு அவர் சொன்னது—"சில வருஷங்களுக்குமுன் ஸ்வாமியை அடியேன் ஸ்ரீஜகந்நாதபுரியில் நன்கு ஸேவித்திருக்கிறேன். ஆனால் நெருங்கிப் பழக

ப்ராப்தமாகவில்லை. அதுமுதல் ஸ்வாமி அடிக்கடி கனவில் காட்சி தந்து எனக்கு ஸாளக்ராம யாத்திரையை நடத்திவைக்க வேணுமென்கிற அபேக்ஷையைக் காட்டி வருவதால் இதை பகவானுடைய நியமனமாகக்கொண்டு அடியேன் விஜ்ஞாபனங்களெழுதிக்கொண்டேன். வெகுநாளாய் ஸ்ரீமுகம் வருவதே நின்றுவிட்டபடியால் அழைத்துக்கொண்டு போகவேணுமென்கிற உறுதியுடன் வந்திருக்கின்றேன்" என்றார்.

இது ஸ்ரீ ஸாளக்ராம பகவானுடைய பரமாநுக்ரஹ பரீவாஹமேயென்றுகொண்ட அடியேன் இதற்கு எவ்விதமான தடையும் சொல்லலாகாதென்றும், இந்த ஸமயம் அவசியம் சென்று ஸேவித்தே வரவேணுமென்றும் உறுதிகொண்டேன். அப்போது உபந்யாஸ ஸபையாரும் ஒருவர் தப்பாமல் 'இந்த ஸமயத்தை இழக்கவே கூடாது; இரண்டு மூன்று மாதங்களானாலும் அவசியம் இந்த யாத்திரையை நடத்தி முடிப்பதே நலம்; எம்பெருமானே நேரில் வந்து அழைப்பது போலன்றோவுள்ளது' என்று கூறினார்கள். சிலர் தாங்களும் உடன் வருவதாகச் சொன்னார்கள். நாலைந்து நாள்களுக்குள்ளாகவே ப்ரயாணப்படுவதென்று உறுதி செய்து 'இரண்டு மாதங்கள் வரையில் உபந்யாஸத்திற்கு விராமம்' என்று சொல்லியுமாயிற்று. உடனே காஞ்சீபுரம் வந்து சேர்ந்தவளவிலே, அஸ்மதாசார்யரான ஸ்ரீ காதிஸ்வாமி அப்போது திருமேனியில் அபரிமிதமான அசக்தியுடன் (Chapra) சப்ரா என்னுமூரிலே [காசி ப்ராந்தத்திலே] எழுந்தருளியிருக்கிறபடியாதலால் அங்கிருந்து தந்தி ஸமாசாரம் கிடைக்க, ஸ்ரீ ஸ்வாமி திருக்குமாரரையழைத்துக்கொண்டு அங்கே செல்லவேண்டியதாயிற்று. அன்றைக்கே புறப்படலாயிற்று. நேபாள மஹந்து சென்னையிலிருந்து திருமழிசை முதலான சில திவ்யதேசங்களை ஸேவித்துக்கொண்டு இரண்டு மூன்று நாளில் காஞ்சிவந்து சேருவதாகச் சொல்லிப் பிரிந்து போனவராதலால் அவரைச் சந்திக்க முடியாமலே நான் சப்ரா சென்றுவிட்டேன். அந்த மஹந்து 3, 4 நாளின் காஞ்சீபுரம் வந்து சேர்ந்திருந்தார்.

அடியேன் சென்றவிடத்துச் செய்தியைச் சுருக்கமாக விஜ்ஞாபிக்கிறேன். சப்ரா சென்று சேர்ந்து ஸ்ரீ ஸ்வாமியின் திவ்யமங்கள விக்ரஹத்தை ஸேவிக்கவும் வர்த்தையாடவும் ப்ராப்தமாயிற்று. "இங்கிருந்து புறப்பட்டுக் காஞ்சிக்கெழுந்தருளவேணும்" என்று ப்ரார்த்திக்கையில் 'அப்படித்தான் உத்தேசம்; இரண்டு நாளில் புறப்படுவோம்' என்று ஸாதித்து, காலை பத்துமணியிலிருந்து மாலை ஐந்துமணி வரையில் அநேக யோக க்ஷேம விசாரங்கள் செய்துகொண்டு வார்த்தையாடிக்கொண்டே யிருக்கையில் 'எல்லாரும் சற்று எழுந்து அப்பால் போயிருங்கள்' என்று நியமித்துவிட்டு ஸந்தியாவந்தனம் செய்தருளிப் படுக்கையை விரிக்கச் சொல்லி சயனித்துக்கொண்டு தியானத்தில் அமர்ந்துவிட்டார். ஆறுமணிக்குமேல் எல்லாரும் வந்து அருகேயிருந்து 'திருமேனியின் நிலை என்ன?' என்று கேட்கையில் 'ஒன்றுமில்லை' என்று ஸாதித்ததுதான் கடைசியான திருவாக்கு. பிறகு இரண்டு நாழிகைக்குள் திருநாடலங்கரித்தாயிற்று. இந்தச் செய்தி அன்றிரவே காஞ்சிக்குத் தெரியவந்தபடியால் இதைச் செவியுற்ற நேபாள மஹந்து இந்த ஸந்தர்ப்பத்தில் ஸாளக்ராம யாத்திரை நடைபெறுதென்று தானே முடிவு செய்துகொண்டு ஸ்வஸ்தானம் சென்று சேர்ந்துவிட்டார். ஸாளக்ராம யாத்திரையில் எம்பெருமானுடைய திருவுள்ளம் இவ்வளவே போலுமென்று நிராசனுயொழிந்தேனடியேன். ...

# எழுபத்தேழு பெரியார்களின் பெருமை

முன்தொடர்ச்சி—(4.)

## 22. ஸ்ரீமதுபயவே (திருவிண்ணகர்) நவநீதம். ஸ்ரீக்ருஷ்ணமாசார்யஸ்வாமி

திருக்குடந்தைக்கு ஸமீபத்திலுள்ள திருவிண்ணகரென்கிற ஒப்பிலியப்பன் ஸன்னிதியில் நவநீதம் க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியென்று ப்ரஸித்தரான மஹான் எழுந்தருளியிருந்தார். இந்த ஸ்வாமி 25 ஸம்வத்ஸரங்களுக்கு முன்பு திருநாட்டுக் கெழுந்தருளினவர். இந்த ஸ்வாமியினுடைய க்ருபைக்கு அடியேன் மிக்க இளமையிலேயே இலக்காகப் பெற்றவன். மஹா ஜ்ஞாநாதிகராயும் சிஷ்டவரிஷ்டராயுமெழுந்தருளியிருந்த இந்த ஸ்வாமியை ஸேவிப்பதற்கென்றே அடியேன் சிலஸமயம் திருவிண்ணகர்க்கு விடை கொண்டிருக்கிறேன். ஸ்வாமியும் பன்முறை காஞ்சிக்கெழுந்தருளிப் பரமாநுக்ரஹம் செய்தருளியிருக்கிறுர். ஸ்வாமி அனேக க்ரந்தங்களை முத்ரணம் செய்வித்தருளியிருக்கிறுர். மஹாபாரதம், ச்ருதப்ரகாசிகைக்கு வியாக்கியானமான பாவப்ரகாசிகை, ஸவ்யாக்க்யானமான மீமாம்ஸாபாதுகை முதலான க்ரந்த ரத்னங்களை க்ரந்தலிபியிலும், நயமயூக மாலிகை, சாரீரக சாஸ்த்ரார்த்த தீபிகை முதலான க்ரந்தங்களை தேவநாகராக்ஷரத்திலும் பதிப்பித்த மஹோபகாரகர். ஸ்வாமியின் திருக்குமாரர்களிருவர் சிறந்த வித்யா நிதிகளாக விளங்கி வருகிறுர்களென்பது விசேஷித்துக் குறிப்பிடத்தக்கது. மூத்த புதல்வரான ஸ்ரீஉவே. வ. ந. ஸ்ரீராமதேசிகாசாரியர் வடமொழி தென்மொழிக் கடலில் பரிபூர்ண பாரங்கதர். இளைய புதல்வரான ஸ்ரீமான் சேஷாத்ரி வடமொழியிலும் ஆங்கிலத்திலும் மிக்க தேர்ச்சிபெற்று அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் உயர்ந்த ஆசிரியராக விளங்கி வருகிறுர். இவ்விரு புதல்வர்களும் ஸகலவிதத்திலும் திருத்தந்தையாரை அதிசயித்த வர்களென்றுல் மிகையாகாது. இவ்விரு திருக்குமாரர்களும் மஹா மேதாவிகள். ... ❀

## 23. ஸ்ரீமதுபயவே. கச்சிக்கிடாம்பி. பாஷ்யகாராசார்யஸ்வாமி.

திருவஹீந்திரபுரத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீஉவே. கச்சிக்கிடாம்பி. பாஷ்யகாராசார்ய ஸ்வாமி இருபது வருஷங்களுக்கு மூன்னம் திருநாட்டுக்கெழுந்தருளின வராகையாலே அந்த ஸ்வாமியை ஸ்ரீவைஷ்ணவமண்டலம் நன்கறியும். இந்த ஸ்வாமி நியாய சாஸ்த்ரத்திலும் உபய வேதாந்தங்களிலும் நிஷ்ணுதர். ஸ்வாமியினுடைய பரிசயம் அடியேனுக்கு நாற்பது ஸம்வத்ஸரங்களுக்கு மேலுண்டு. ஆனுல் மிக நெருங்கிப் பழகி வார்த்தையாட அதிகமாக நேர்ந்ததில்லை. ஆங்காங்கு திவ்ய தேசங்களில் உத்ஸவ காலங்களில் ஸேவை ஸாதிப்பர். வித்வத்வரேண்யரான ஸ்ரீரங்கம் எம்பார் க்ருஷ்ண மாசார்ய ஸ்வாமியின் ப்ரசம்ஸையை இந்த ஸ்வாமி சில ஸமயங்களில் செய்தருளக் கேட்டிருக்கிறேனுதலால் இவர்க்கு அந்த ஸ்வாமி ஸன்னிதியில் சாஸ்த்ராத்யயனங்கள் நடந்ததாக அடியேன் க்ரஹித்திருப்பதுண்டு. அடியேனுடைய வேதாசார்யரான மாம்பள்ளம் ஸ்வாமி இந்த ஸ்வாமியினுடைய வித்யாபரிச்ரமங்களைப்பற்றி அடிக்கடி ஸாதிப்பதோடு இந்த ஸ்வாமி ஆழ்ந்த ஞானமுடையவரென்றும், பல ஸந்தர்ப்பங்களில் ஸாதிக்கக் கேட்டிருக்கிறேனுதலால் இந்த ஸ்வாமியை விசிஷ்ட வித்வானென்று போற்று

வனடியேன். இவருடைய திருக்குமாரரும் வித்வானுய் திருமலையில் ஆகமோபாத்யாயராக விளங்கிவருகிருர். சிறந்த அதிகாரி. ... ... ❁

## 24. 25. ஸ்ரீமதுபயவே. திருநாங்கூர். ப்ரதிவாதிபயங்கரம் க்ருஷ்ணமாசாரியர்ஸ்வாமிகளிருவர்.

திருநாங்கூரில் பல மஹான்கள் எழுந்தருளியிருந்தார்கள். அங்கு வைகுந்த விண்ணகரம் ஸன்னிதி வீதியில் ப்ரதிவாதிபயங்கரம் பெரிய கிருஷ்ணமாசார்யஸ்வாமியும் சின்ன க்ருஷ்ணமாசார்யஸ்வாமியும் ப்ரஸித்தர்களாயிருந்த மஹநீயர்கள். "ஏகயோக்த்யா புஷ்பவந்தெள திவாகரநிசாகரௌ" என்ற கணக்கிலே இவ்விரு மஹான்களையும் ஒரு சேர அநுபவிக்கிறேன். பெரிய க்ருஷ்ணமாசார்யஸ்வாமி அபார வித்யா நிதியாக எழுந்தருளியிருந்தவர். சாஸ்த்ரஜ்ஞர்களில் தலைவராயிருந்ததோடு மஹாகவீச்வரராய் அநேக காவியங்கள் ஸ்தோத்ரங்கள் அருளிச்செய்திருந்தார். இந்த ஸ்வாமி அடியேனுடைய இளமையில் பல வருஷங்கள் ஸ்ரீ காஞ்சியிலெழுந்தருளியிருந்தபடியால் இந்த ஸ்வாமியிடத்திலும் சில நாடகங்கள் வாசிக்க நேர்ந்ததடியேனுக்கு. இந்த ஸ்வாமி திருநாங்கூரில் குலகூடஸ்தர் ஸன்னிதியைத் திரு ப்ரதிஷ்டை செய்திருந்தார். 40 வருஷங்களுக்கு முன்பு சரமஸமயத்தில் உத்தமாச்ரமியாகித் திருநாட்டுக்கெழுந்தருளினுர். இந்த ஸ்வாமிக்கு வித்வத்பஹுமானமாக (தோடா) என்கிற கரபூஷணம் கிடைத்திருந்தபடியால் "தோடா. கிருஷ்ணமாசார்யஸ்வாமி" என்று வ்யபதேசமிருந்துவந்தது. இவர்க்கு ஸந்ததியில்லாமையினுல் இவர் ஏறியருளப்பண்ணின கூடஸ்த ஸன்னிதியும் பரிபாலனமில்லாமே போயிற்று. அது மிகவும் சோசநீயம்.

இந்த ஸ்வாமியின் திருநாமமேகொண்டு இவருடைய ஸங்கிஹிதஜ்ஞாதியும் இவருடைய அடுத்த திருமாளிகைக்காரருமானவர் "சின்ன கிருஷ்ணமாசாரியர்ஸ்வாமி" யென்றே வழங்கப்பட்டுவந்தார். இவர் ஸ்ரீமத் திருக்கண்ணபுரம் பட்டப்பாஸ்வாமி ஸன்னிதியிலும் மற்றும் பெரியார்களிடத்திலும் நியாய வேதாந்தங்களும் ஸ்ரீ பாஷ்ய பகவத் விஷயாதிகளும் அதிகரித்து மிகச் சிறந்த ப்ரவக்தாவாக விளங்கினுர். சிலபல ஸம்வத்ஸரங்கள் சென்னைமாநகரில் சாரிடிகளில் ப்ரவசனநிரதராய் ப்ரக்க்யாதராயிருந்தார். இந்த ஸ்வாமியின் இரு திருக்குமாரர்களும் வித்வான்களாக விளங்கிவருகிருர்கள். அண்ணங்கராசாரியரென்று திருநாமமுடைய ஜ்யேஷ்டகுமாரர் குஜராத் ப்ராந்தத்தில் வடதால் என்னுமிடத்தில் சாஸ்த்ரப்ரவக்தாவாக இருந்துகொண்டு ஸ்வாமிநாராயண ஸம்ப்ரதாயஸ்தர்களான பலரை வித்வான்களாக்கிவருகின்றுர். சிறிய திருக்குமாரர் ஸ்ரீநிவாஸாசாரியரென்பவர் தற்போது திருநெல்வேலியிலிருந்துகொண்டு ஸம்ப்ரதாய ப்ரசார ப்ரவணராயிருந்துவருவது விச்வப்ரஸித்தம். ... ... ❁

## 26. ஸ்ரீமதுபயவே. கவிபூஷண. அத்தங்கி. குமாரதாதாசார்யஸ்வாமி.

திருவல்லிக்கேணியில் ஸ்ரீமத். அத்தங்கி. குமாரதாதாசார்ய ஸ்வாமியென்று ஸுப்ரஸித்தரான வித்வங்மணி எழுந்தருளியிருந்தார். இந்த ஸ்வாமி ஸாஹித்ய க்ரந்தங்களில் நிகரற்ற மஹா வித்வான். ஸகல காவ்ய நாடகாலங்கார க்ரந்தங்களும் இந்த ஸ்வாமிக்கு வாசோவிதேயங்களாயிருந்தன. வ்யாகரண வேதாந்த நிபுணர்.

கவித்வத்தில் மஹா நிபுணரென்பதை 'கவிபூஷணர்' என்னும் இவருடைய பிருதமே விளக்கி நிற்கும். இந்த ஸ்வாமியால் இயற்றி வெளியிடப்பட்டிருக்கின்ற உத்தரராமசரித வியாக்கியானம் முதலான சில க்ரந்தங்களினுல் இவர் சிறந்த க்ராந்திகர் என்பது தெற்றென விளங்கும். இந்த ஸ்வாமி திருநாட்டுக்கெழுந்தருளி நாற்பது வருஷங்களுக்கு மேல் ஆய்விட்டாலும் இவருடைய கீர்த்தி நிகரற்றது. இவருடைய பரிஸரத்தில் எப்போதும் பல வித்வான்கள் கூடியேயிருப்பார்கள். இவருடைய ஸகாசத்தில் ஏதாவது விஷய விசாரங்கள் நடந்துகொண்டேயிருக்கும். மஹாதனிகராகையால் ஸத்பாத்ர விநியோகங்களை விசேஷமாக நடத்திக்கொண்டேயிருப்பர். இவரிடத்தில் பரத்வம் அதிகமாயும் ஸௌலப்யம் குறைவாயுமிருக்குமென்று சிலர் சொல்லுவதுண்டு. இந்த ஸ்வாமியினுடைய க்ருபைக்கு அடியேன் பாத்திரமாகப் பெற்றவரலாற்றைச் சிறிது விஜ்ஞாபிக்கிறேன்.

ஸ்ரீ காதிஸ்வாமி விசேஷமாக வடநாட்டில் ஸஞ்சரித்துக் கொண்டிருக்கையில் வல்லப மதஸ்தர்களோடு சிறிது விவாதம் ஸம்பவித்தது. பம்பாய் மாநகரில் "பூலேச்வர், படாமந்திர்" என்கிறவிடத்தில் மிகவும் ப்ரதிஷ்டிதராயிருந்த வல்லபாசாரியர் "பட்ட ஸ்ரீபலபத்ர சர்மா" என்பவரைக்கொண்டு 'ஸித்தாந்த ஸித்தாபகா' என்றொரு விசிஷ்டாத்வைதமத கண்டன க்ரந்தத்தை வெளியிட்டார். அந்த பண்டிதர் 'கவிகாவ்யரத்நாகரர்' என்று விருதுபெற்றவர். அவருடைய அந்த க்ரந்தத்திற்கு ஸ்ரீகாதிஸ்வாமி 'படபாநல:' என்னும் பெயருள்ள மறுப்பு நூலையெழுதி ளியிட்டிருந்தார். அதில் ஒரு வார்த்தை எழுதப்பட்டிருந்தது. (அதாவது) "இவர் வெறும் கவியேயொழிய சாஸ்த்ரஜ்ஞரல்லரென்பது இவர் வஹிக்கும் விருதினுலேயே ஸ்பஷ்டமாகிறது" என்று. அதைக் கடாக்ஷித்த அத்தங்கி ஸ்வாமி இந்த தூஷணம் கவிபூஷணரான தம்மையும் ஸ்பர்சிக்கிறதென்று கருதிச் சீற்றங்கொண்டு ஸ்ரீகாதிஸ்வாமியின் நூலைக் கண்டிக்க ஆசைகொண்டு, விஷயத்திலிறங்கிக் கண்டனமெழுதினுல் அது நன்ருயிராதென்று கருதி அதிலிறங்காமல் வியாகரணப் பிழைகள் இருப்பதாக எடுத்துக்காட்டி தூஷித்து ஒரு துண்டுப் பிரசுரம் வெளியிட்டிருந்தார். அந்த ஸமயத்தில் ஸ்ரீ காதிஸ்வாமி வெகுதூர தேசத்தில் யாத்திரை செய்துகொண்டிருந்தார். மேலேசொன்ன அத்தங்கி ஸ்வாமியின் துண்டுப் பிரசுரத்தை அடியேன் பார்த்தவுடனே மிகவும் கொதிப்பு உண்டாயிற்று. அப்போது மஞ்ஜுபாஷிணீ பத்ரிகையை வெள்ளிக்கிழமை தோறும் நடத்திக்கொண்டிருக்கிறேன். அதில், கவிபூஷணருடைய தூஷணங்களுக்கெல்லாம் மறுவாய் திறக்க முடியாதபடிக்கு ஆணித்தரமான மறுப்புகளையெழுதி வெளியிட்டேன். வசனரூபமாகவன்றிக்கே ஐம்பது சுலோகங்களினுல் மறுத்திட்டேன்.

ஸ்ரீகாதிஸ்வாமிக்கு மஞ்ஜுபாஷிணீ மூலமாய் இந்த பதிலுரை கிடைத்ததேயொழிய அத்தங்கி ஸ்வாமியின் துண்டுப்பிரசுரம் கிடைக்கவில்லை. காதிஸ்வாமி அடியேனது மறுப்புரையைக் கடாக்ஷித்தருளிப் பரமக்ருபை பொங்கி ஸ்ரீமுகம் ஸாதித்தருளினுர். அது நிற்க, அத்தங்கி ஸ்வாமி அடியேனுடைய மறுப்புரைகளை மஞ்ஜுபாஷிணியில் கடாக்ஷித்தருளி, அது முதலாக விசேஷப்ரீதி செய்தருளி அடிக்கடி ஸந்திக்கவும் ஸம்பாஷிக்கவும் நியமித்திருந்தார். முதலில் என்னுடைய மறுப்புரையைப் பார்த்தவுடனே அவர்க்குக் கொதிப்பு உண்டாகி அதற்கு மறுப்பெழுதி வெளியிட வேணுமென்று

தோன்றியதாம். அவர்க்கு இரண்டு திருக்குமாரர்கள். இருவரும் நன்றாக வாசித்தவர்கள். ஒரு திருக்குமாரர் சிறந்த பண்டிதராயிருந்தார். இதற்கு நீ கண்டன மெழுதவேண்டிய தென்று அவர்க்கு நியமித்தருளினாராம். ஸ்ரீஉவே. வித்வான் அ. வீ. நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமி அப்போது அந்த அத்தங்கி ஸ்வாமி திருமாளிகையிலேயே குடிவாழ்ந்து அவர்க்கு ப்ரேமபாத்ரமாயிருந்தபடியால் அவருக்கும் நியமித்திருந்தாராம். அவ்விருவரும் அடியே னுடைய மறுப்பு ச்லோகமாலிகையை ஆழ்ந்து பார்த்து அத்தங்கி ஸ்வாமியினிடம் சொன்னார்களாம்:—"இதற்கு நாம் மறுப்பெழுதி வெளியிட்டால் மூன்றுநாளிலேயே அண்ணங்கராசாரியரிடமிருந்து சரமாரியாக பதில் வெளிவந்துவிடும்; அவர் சாஸ்த்ரிய ஸரணியிலேயே போயிருக்கிறபடியால் அடுத்தபடியாக நாம் விச்ராந்திபெற்று நிற்பதைவிட இப்போதே விச்ராந்தி கொள்வது நன்று" என்றார்களாம். இதை பிறகு அத்தங்கி ஸ்வாமி திருவாக்கினாலேயே கேட்டறிந்தேனடியேன். ... ... ❁

## 27. ஸ்ரீமதுபயவே. அ. வீ. நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி.

கீழே ஸ்ரீமத் கவிபூஷண குமாரதாதாசார்ய ஸ்வாமி ப்ரஸ்தாவத்தில் இந்த ஸ்வாமி ப்ரஸக்தராயிருப்பதால் இவருடைய பெருமையும் இங்கே பேசலாகிறது. அகரம், வீரவல்லி, நரஸிம்ஹாசாரியரென்பது திருநாமம். ஆனால் அ. வீ. என்றே ப்ரஸித்தர். இவர் பரமபதித்து இருபது ஸம்வத்ஸரமாகிறது. ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில் பல வாண்டுகள் வாசித்து வியாகரணத்தில் மஹாபாஷ்யாந்த வித்வன்மணியாக விளங்கினார். உத்தீர்ணரான பிறகு திருவல்லிக்கேணியிலேயே நிரந்தர வாசமாக எழுந்தருளியிருந்து சென்னையில் ப்ரஸித்தமான ஆனந்தா ப்ரெஸ்ஸில் பரிசோதக பதவியில் அமர்ந்து அனேகஸம்ஸ்க்ருத க்ரந்தங்களை வெளியிட்டார். ஸ்ரீராமாயணத்தையும் ஸ்ரீபாக வதத்தையும் ஒரு பதமும் விடாமல் அக்ஷரச: தமிழில் மொழி பெயர்த்துப் பல ஸம்புடங் களாக இவர் வெளியிட்டிருப்பது தமிழ்நாடு முழுவதும் பரவியுள்ளது. மேலே ப்ரஸ் தாவித்த அத்தங்கி ஸ்வாமிக்கு தக்ஷிணபாஹுவாக விளங்கிவந்தார். திருவல்லிக்கேணியில் எழுந்தருளியிருந்த ஸ்ரீஉவே. சே. கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி அச்சிட்ட பகவத்விஷயம் [சே. கி. பதிப்பு என்றே ப்ரஸித்தமாகவுள்ளது] பெரும்பாலும் இந்த ஸ்வாமியினால் பரிசோதிக்கப்பெற்றது. இந்த ஸ்வாமி காவ்ய நாடகாலங்காரங்களிலும் நிகரற்ற நிபுணராயிருந்ததோடு நிரவத்ய கத்யபத்யரசனைகளிலும் அதிஸமர்த்தராயிருந்தார். இவர் திருமலை திருப்பதி ப்ரதிவாதிபயங்கர ஸ்வாமிகளின் திருவடிஸம்பந்தம்பெற்றவராதலால் அடியேனுடைய திருத்தகப்பனாரிடத்தில் மிக ப்ராவண்யம் கொண்டிருந்தார். அப்போதே இவருடைய பாண்டித்யத்தைத் திருத்தகப்பனார் மிகவுங்கொண்டாடினது அடியேனுக்கு நினைவிருக்கிறது. இவர்க்கு ஜ்யேஷ்டப்ராதாவொருவரும் கநிஷ்ட ப்ராதாவும் சிறந்த வித்வானாயிருந்தார். கநிஷ்ட ப்ராதா ஸ்தலசயனம் ஸ்வாமியென்பவர் ஸாஹித்யப்ர வீணராயிருந்ததோடு க்ரமாந்தம் அதீதவேதராய் அடியேனுடைய வேதவேதாந்த வைஜயந்தி பாடசாலையில் இருபது ஸம்வத்ஸரம் வேதாத்யாபகராக விளங்கினர். இவரினும் கனிஷ்டர் க்ருஷ்ணஸ்வாமியென்பவர் லௌகிகோத்யோகத்தில் ப்ரவருத்தராயிருந்தாலும் உபயவேதாந்த ரஹஸ்யார்த்தங்களை நன்குணர்ந்தவராயிருந்தார். ஆக ஸஹோதரர்கள் நால்வரும் அடியேனுக்கு அடிக்கடி ஸ்மரணீயர்களாயிருந்து வருகிறார்கள். ... ❁

ஸ்ரீரஸ்து.

ஸ்ரீஹஸ்திசைலசிகரோஜ்ஜ்வலபாரிஜாதாய நமஃ

அஸ்மத் குருபரம்பராப்யோ நமஃ

:ஸ்ரீமந்நிகமாந்த மஹாகுருவின் ஸப்தம சதாப்தீ .

பூர்த்தி ஸ்மாரகமாக ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதிபயங்கரம்::

அண்ணங்கராசாரியர் எழுதிய

# நற்பொருளெழு நூறில் முதல் நூறு.

உபந்யாஸகர்களுக்கு அரிய பெரிய விருந்து.

——ஸ்ரீராமாநுஜன் அநுபந்தம்——

இதிலுள்ள விஷயங்களுக்கு அட்டவணை




SRI JAGADACHARYA P. B. ANNANGARACHARYA, KANCHI PURAM-3.

1967

விலை 75 N. P.

# ஒரு மஹா புருஷ ஸம்வாதம்

லௌகிகவைதிகங்களில் மஹாநிபுணரும் வித்வானுமான ஒருவடகலைஸ்வாமி 5-12-67ல் அடியேனைக் கடாக்ஷித்தருள வெழுந்தருளினர். குசலப்ரச்னம் பண்ணிவிட்டு "நற்பொருளெழுநூறில் முதல்நூறு ஸ்ரீராமாநுஜன் 227ல் எதிர்பார்க்கப் பட்டிருந்ததே, வரவில்லையே, ஏன்?" என்றார். 'இதோ வெளிவரவிருக்கிறது, கடாக்ஷிக்கவேணும்' என்றுசொல்லி ப்ரதமசதகத்தைக் கையில் கொடுத்தேன். இரண்டரைமணிகாலம் அவகாசங்கொண்டு பூர்த்தியாகக் கடாக்ஷித்து, உள்ளமுமுடலும் பூரித்து ப்ரேம பரீவாஹமாகச் சில வார்த்தைகள் ஸாதித்துவிட்டு "ஸமீபத்தில் வெளிவந்த வைதிகமநோஹராவிலும் ஸ்ரீராமாநுஜனிலும் பிராட்டிவிஷயம் ப்ரபத்திவிஷயம் முதலான சிலவிஷயங்களை ப்ரஸங்கித்து எழுதியிருப்பதைப்பற்றி என்ன தத்துவம்? அறிய விரும்புகிறேன்" என்றார். ஒருமணிகாலம் அந்த ஸ்வாமிக்குப் பரமத்ருப்திகரமாக விடை கூறினேன். அதன் சுருக்கம் வருமாறு:-

சிலவாண்டுகட்குமுன் ஒப்பிலியப்பன்ஸன்னிதி. நவநீதம். ஸ்ரீராம தேசிகாசாரியர் "தேசிகப் பிரபந்தவுரை"வெளியிட்டார். ஸ்ரீவசனபூஷணத்தில் பிள்ளான்வார்த்தையாக "மதிராபிந்து மிச்ரமான சாதகும்பமய கும்பகத தீர்த்தஸலிலம் போலே" இத்யாதி ஸ்ரீஸூக்தி காணப்படுகிறது. ஸ்வர்ணபாத்ரகதமான கங்கா தீர்த்தத்தில் மத்ய பிந்து கலந்தாற் போலே என்கிற இந்த த்ருஷ்டாந்தத்திற்கும் மேலாக "அந்த தீர்த்த ஸலிலம் மத்ய ப்ரவாஹ பரீதமானுப் போலே" யென்னவேண்டும்படியாக அப்புத்தகத்தில் (D.R. என்கிற மஹான்) பூர்வாசார்ய நிந்தாமயமாக (ஸ்ரீதேசிக வைபவம்) என்று ஒன்றை வெளியிட்டு அதை மறுபதிப்புகளும் செய்து வருகிறார். அதிலுள்ள திவ்ய ஸ்ரீஸூக்திகளைச்சிறிது கேட்டருளவேணும்"; என்று சொல்லி ஸ்ரீராமாநுஜன்222ல் 22. 23 பக்கங்களைப்பூர்த்தியாக வாசித்துக்காட்டினேன். அதில் "இவர்தமக்கு எம்பெருமானர் ஆழ்வான் பட்டர் நஞ்சீயர் நம்பிள்ளை பிள்ளைலோகாசாரியர் மணவாளமாமுனிகள் முதலான ஆசாரியர்களோடு எவ்வளவு உறவோ அவ்வளவே உறவுதான் ஸ்ரீமந்நிகமாந்த மஹாகுருவோடும்-என்கிற தத்துவத்தை யறியப் பெருமையால் நிகமாந்த குருவுக்கும் தனக்கும் ஏதோ நெருங்கியஉறவு இருப்பதாக நினைத்தும், அவருடைய ஸ்ரீஸூக்திகள் பலவும் தாம் ஆதரிக்கிற மதத்திற்கு வஜ்ரகுடாரமேயென்பதையறியாமலும் அந்த தேசிக சரித்திரத்தில் இவரெழுதியிருந்தவையத்தனையும் உண்மைக்கு எதிரானவை."....

....

"திருவாறுயிரப்படிக்குப்பின் தோன்றிய பலவியாக்கியானங்களிலுள்ள தோஷங்களை யெல்லாம் களைந்து தேசிகனருளிய நிகமபரிமல மென்னும் அழகிய வியாக்கியானம் ராமாநுஜாபாத்ரம் அவதரிக்கக் காரணமாயிற்று."— —"நிகமபரிமலத்தில் ஈடு முதலியவற்றிலுள்ள அபார்த்தங்கள் மட்டுமன்றிக்கே திருவாறுயிரப்படியும் பூர்த்தியாகக் கண்டிக்கப்பட்டுத் தொலைந்ததென்று D.R. எழுதியிருக்கலாமே" இத்யாதி ஸ்தலங்களை வாசித்துக் காட்டுகையில் அந்தஸ்வாமி"இவற்றை நான் பன்முறையும் படித்திருக்கிறேன்; பலர்க்கும் பலகால் "யாவச்சக்யம் ச்ராவயிஷ்யே" என்கிறகணக்கில் கேட்பித்திருக்கிறேன்" என்று ஸாதித்துவிட்டு"ஸந்தோஷம் பரமஸந்தோஷம்; பிராட்டிவிஷயம், ப்ரபத்திவிஷயம் முதலானவற்றில் தேசிகனுடைய திருவுள்ளவுண்மை உலகுக்கு வ்யக்தமாகத் தெரியவேண்டியது அவசியந்தான்; இன்று எனக்கு மஹத்தான ஸூக்ருத மென்று நினைக்கிறேன்; நியமிக்கவேணும், விடைகொள்ளுகிறேன் "என்று சொல்லிக்கொண்டே ரூபா 1116க்கு செக்கு வெட்டிக் கொடுத்து விட்டு car ஏறினர். இதி ஸர்வம்ஸமஞ்ஜஸம், ...

....

ஸ்ரீ:

ஸ்ரீஹஸ்திசைல சிகரோஜ்ஜ்வல பாரிஜாதாய நம:

அஸ்மத் குருபரம்பராப்யோ நம:

# நற்பொருளெழுநூறு

ஸ்ரீ காஞ்சீ. ப்ரதிவாதி பயங்கரம்

அண்ணங்கராசாரியர் எழுதியது.

ஸ்ரீமான் வேங்கட நாதார்ய: கவிதார்க்கிக கேஸரீ,
வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி.

நம் ஸ்ரீ வேங்கட நாதார்ய ஸார்வ பௌமர் திருவவதரித்து எழுநூறுண்டு நிரம்பும் ஸமயம் ஸந்நிஹிதமாயிருப்பது பற்றி இந்த ஸமய விசேஷத்தில் அவரவர்கள் தம் தம் பக்திப்ரகர்ஷ மடியாக யதாசக்தி ததீய குணநுபவங்களாலே க்ருதக்ருத்யர்களாக வேண்டியது ஸ்வரூப ப்ராப்தம். எங்கும் ஆசார்ய பக்தர்களை இருவகையாகப் பார்க்கலாம்; ஆசாரியர்களின் பலவகையான பெருமைகளை உட்புகுந்து தெரிந்துகொள்ளாமல் ஸ்தூலமாக மட்டும் தெரிந்துகொண்டு பரதூஷணமே போதுபோக்காயிருப்பார் ஒருவகுப்பினர். ஆசாரியர்கள் திவ்ய க்ரந்தங்களினல் செய்தருளின மஹோபகாரங்களை ஆழ்ந்தறிந்து அகங்குழைந்து அந்த திவ்ய ஸூக்திகளின் அர்த்தவிசேஷப்ரகாசனங்களினல் கிஞ்சித்கரிக்கக் குதூஹலமுடையார் மற்றொரு வகுப்பினர். இவற்றுள் முந்தின வகுப்பைச் சேர்ந்தவர்கள் செய்யக்கூடிய கிஞ்சித்காரங்கள் இப்போது விசேஷமாக நடைபெற்று வருகின்றன. (அதாவது) முக்கியமாகப் பலவிடங்களிலும் கூட்டங்கள் கூட்டிப் பேசுவதாம்.

அன்னவர்கள் பேசும் பேச்சுக்கள் எங்கும் ஒரேவிதமாகத் தானிருக்கும்; "நம் தேசிகனைத் தென்னசாரியர்கள் அநியாயமாய் விபவத்திலும் பரிபவப்படுத்தினர்கள்; அர்ச்சையிலும் பரிபவப்படுத்தி வருகிறார்கள். விபவத்தில் (1) திருமாளிகை வாசலில் க்ரந்தாவலோகனம் செய்துகொண்டெழுந்தருளியிருந்த ஸ்வாமியைக் காலை வாரியிழுத்துத் தெருவிலே தள்ளி ஹிம்ஸித்தது; (2) திருமுடியிலே படும்படி பாதரக்ஷைகளைத் தோரணமாகக் கட்டித் தொங்கவிட்டது; (3) ச்ராத்தத்தில் நிமந்த்ரணத்திற்கு ஒப்புக்கொண்டிருந்தவர்களை ஸமயத்தில் வஞ்சிக்கச் செய்தது; (4) ஏகாதசியன்று பொங்கலைக் கையில் கொணர்ந்து கொடுத்துத் திணிக்கும்படி நிர்ப்பந்தித்தது; (5) ஸ்வாமியின் பாண்டித்யப் பெருமைகளில் பொறாமைகொண்டு வாதத்திற்கு அழைத்தது. இப்படியிப்படியாகச் செய்த ஹிம்ஸைகள் வாசாமகோசரம். இத்தகைய ஹிம்ஸைகள் விபவத்தோடு போய்விடாமல் அர்ச்சையிலும் செய்துவருமவை சொல்லவேண்டியதில்லை; ப்ரத்யக்ஷமாகப் பார்த்து வருகிறீர்கள். இவை தவிர இன்னமும் செய்கிற ஹிம்ஸைகளுக்கு அளவேயில்லை; திருவாறுயிரப்படிக்குப் பின் தோன்றிய வியாக்கியானங்களிலுள்ள அபார்த்தங்களைக் களைந்து ஸ்வாமி ஆச்சரியமாக அருளிச்செய்திருந்த நிகமபரிமலத்தை அபஹரித்துவிட்டார்கள்; சரணகதியின் பெருமையையும் பிராட்டியின் விபுத்வ காரணத்வ மோக்ஷப்ரதத்வாதி வைபவங்களையும் ஸ்வாமி தேசிகன் ஆச்சரியமாக நிலைநாட்டியிருக்க அவற்றையும் தூஷித்து வருகிறார்கள்....என்றிப்படி ஒருவர்மாறி ஒருவராகப் பேசு

வதும் கண்ணீர்மழைசோர நிற்பதுந்தான் கூட்டங்கள்தோறும் காணக்கூடிய நிகழ்ச்சி. வேறு செய்யகில்லாதார் இவற்றையே நிச்சலும் செய்து ஸ்வரூபம் நிறம் பெறுக. "இரண்டு தனியன்களைப் பெறும் பாக்கியம் நம் தேசிகனுக்கே அஸாதா ரணமாக வாய்த்தது; தேசிக சப்தம் ஈரரசுபடாமல் தமக்கே உரித்தாயிருக்கும் பாக்கியமும் நம் தேசிகனுக்கேயாகும்; வேங்கடத்துச்சியில் கண்ட மாமணியைத் தண்காவிலன்றோ கண்டார் கலியன். "ஹந்த ஹந்த ராமக்ருஷ்ண தூஷணபிதாயி நாம் கிம் நு சித்ரமத்ர சைத்ய ராவணாநுஸாரிணாம்" என்று அக்காலத்திலேயே மனம் நொந்து பேசியிருக்கவில்லையா ?" என்றிப்படிப்பட்ட வார்த்தைகளைச் சந்தை சொல்லித் திருவைசொல்லி ஆங்காங்கு பாடம் ஒப்பித்துவருகிறார்கள்; வருக வருக.

மேலே குறித்த இருவகுப்பில் இரண்டாம் வகுப்பைச் சேர்ந்த அடியேன் யதாசக்தி செய்ய நினைத்த கிஞ்சித்காரம்—நிகமாந்த மஹாகுருவின் நிதிபோன்ற நூல்களிலிருந்து எழுநூறு அர்த்தங்களைத் தென்மொழியிலும் வடமொழியிலும் தெளிவாகவெழுதி உபஹரிக்கவெழுகின்றேன். வடமொழியில் எழுதுவது ஸதர்த்த ஸப்தசதீ என்பதாம். தென்மொழியிலெழுதுவது இதோ வெளிவந்து கொண்டேயிருக்கின்றது. நூறுநூறாக ஏழு மாதங்களுக்குள் வெளிவந்து முடிவு பெறும். இங்ஙனே ஸங்கல்பம் செய்துகொண்டது போலவே இவ்வெழுநூறு நற்பொருள்களில் ஸம்ப்ரதாய பேத சர்ச்சையில் சேர்ந்த அர்த்தம் ஒன்றுகூடப் புகாதபடிக்கும், * கேட்டறியாதன கேட்கின்றேன் * கண்டறியாதன காண்கின்றேன் * என்று அநஸூயுக்கள் அகமகிழ்ந்து உளங்குளிர்ந்து உரைக்கும்படிக்கும் அமைக்கவேண்டுமென்றும் திடமான ஸங்கல்பம் செய்துகொண்டேன். .... ....

இதுகாறும் அடியேனெழுதி வெளியிட்ட உபந்யாஸசதத்வயம், நல்வார்த்தை நானூறு முதலியவற்றிற்காட்டிலும் இந்த நற்பொருளெழுநூறு மிகவிலக்ஷண மென்பதை ஸஹ்ருதய ரஸிகர்கள் உணர்வர்கள்.

வெண்பா

வேதக் கடல்கடைந்த வேதாந்த வாரியர்தம்
போதக் கடலாகப் போந்தவிது—கோதற்ற
ஞானியர்க்கு நற்செல்வாம் நன்னிதியாம் நல்விடாம்
தேனி லினிதாம் தெளிந்து.

— எழுநூறில் முதல்நூறு —

1. ஹயக்ரீவஸ்தோத்ரே (3) * வக்த்ரீ வேதாந் பாது மே வாஜிவக்த்ரா * இங்கு (வேதாந் வக்த்ரீ) என்பதில் சிலர்க்கு ஸந்தேஹமுண்டாகும்; யதிராஜ ஸப்த தியுபக்ரமத்தில் * ப்ரவக்தா ச்சந்தஸாம், வக்தா பஞ்சராத்ரஸ்ய * என்றதுபோல இங்கும் (வேதாநாம் வக்த்ரீ) என்று ஷஷ்டியிருக்கவேண்டாமாவென்று கலங்குவர். இரண்டுக்கும் வியாகரணத்தில் வழியுண்டு. வியாகரணத்தில் சென்று துவள வேண்டா; ஸ்ரீ ராமாநுஜர் சரணாகதி கத்யத்தில் * த்வயம் அர்த்தாநுஸந்தாநேந ஸஹ ஸதா ஏவம் வக்தா * என்றருளிச் செய்ததில் (த்வயம் வக்தா) என்றிருப்பதைச் சிந்தை செய்வது.

2. (அந்தச்லோகத்திலேயே) [வாஜிவக்த்ரா.] பஹுவ்ரீஹியில் ஸமாநாதிகரண ஸமாஸமென்றும் வ்யதிகரண ஸமாஸமென்றும் இரண்டுண்டு. பீதம் அம்பரம் யஸ்ய ஸ:- பீதாம்பர:; க்ருஷ்ண: கேச: யஸ்ய ஸ:-க்ருஷ்ணகேச:. என்னுமிவை ஸமாநாதிகரணஸமாஸம். சக்ரம் பாணௌ யஸ்ய ஸ:- சக்ரபாணி: இத்யாதௌ வ்யதிகரண ஸமாஸம். அதேபோல் இங்கு, (வாஜீ வக்த்ரே யஸ்யாஸ்

ஸா) என்றோ (வாஜிந இவ வக்த்ரம் யஸ்யாஸ் ஸா) என்றோ சொல்லவேண்டுதலால் வ்யதிகரண ஸமாஸமென்க.

3. (ஹயக். 5.) * [அபௌருஷேயைரபி வாக்ப்ரபஞ்சைः அத்யாபி தே பூதிம் அத்ருஷ்ட பாராம்] வேதத்தில் ஹயக்ரீவரைப் பற்றி எங்கே ஓதப்பட்டிருக்கின்றதென்று கேட்க வேண்டா. கீழ் மூன்றும் சுலோகத்தில் * வாகீசாக்யா வாஸுதேவஸ்ய மூர்த்தி: * என்று ஹயக்ரீவரை வேத வேத்யனை:எம்பெருமானுடைய மூர்த்தி விசேஷமாகவே சொல்லியிருக்கையாலே எம்பெருமானைப் பற்றினதெல்லாம் ஹயக்ரீவரையும் பற்றினதேயென்று கொள்ளக் குறையில்லை.

4. இதற்கொரு நிதர்சனம் காணலாம்; கோதாஸ்துதி இரண்டாம் சுலோகத்தில் ஆண்டாளை விளித்து * வைதேசிக: ச்ருதிகிராமபி பூயஸீநாம் தே மஹிமா* என்கிறார். 'வேதங்களாலும் அறுதியிடவொண்ணாதது ஆண்டாளுடைய மஹிமை' என்று கூறினது ஆண்டாளை ஸ்ரீ மஹாலக்ஷ்மியாகவே கொண்டன்றோ. அதுபோலவே.

5. ஆழ்வார்கள் * வசையில் நான்மறை கெடுத்த அம்மலரயற்கருளி முன் பரிமுகமாய், இசைகொள் வேதநூலென்றிவை பயந்தவனே! * என்றும், * பன்னு கலை நால்வேதப் பொருளையெல்லாம் பரிமுகமா யருளியவெம் பரமன் * என்று மருளிச்செய்திருப்பதுகொண்டு (ச்லோ. 7ல்) * தைத்யாபநீதாந் தயயைவ பூயோபி அத்யாபயிஷ்யோ நிகமாந் ந சேத் த்வம்—மந்தோபவிஷ்யந் நியதம் விரிஞ்ச: * என்றருளிச் செய்தார்.

6. (ஹயக். ச்லோ. 13.) * மநோகதம் பச்யதி யஸ் ஸதா த்வாம்....கிங்குர்வதே தஸ்ய கிரோ யதார்ஹம் * என்றவிடத்தில் வாக்குக்கள் வச்யமாகின்றன வென்று சொல்லாதே அவனுக்குக் கைங்கர்யம் செய்கின்றனவென்று சொன்னது - சக்ரவர்த்தி திருமகனுக்கு அஸ்த்ரக்ராமங்கள் "இமே ஸ்ம கிங்கரா:" என்றுநின்றதை நினைப்பூட்டுவதற்காக வென்னலாம்.

7. பகவத் திவ்ய ஸௌந்தர்ய லாவண்ய தர்சனத்திலோ பாகவதவாகம்ருத ச்ரவணத்திலோ மஹத்தான ஆனந்தமுண்டானாலுங்கூடச் சிலர் விகாரமடையாமலேயிருந்திடுவர்கள்; உண்மையான ஆனந்தமுண்டானால் பரவசமாகக் கண்ணீர் பெருகியே தீருமென்பதை (ஹயக். 16.) * அமாந்தமாநந்த பயோதி மந்த: பயோபிரக்ஷுணம் பரிவாஹயந்தி * என்பதனால் காட்டியருளுகிறார்.

8. (ஹயக். 18.) * ஸமேதிஷீரந் தவ பாதபத்மே ஸங்கல்ப சிந்தாமணய: ப்ரணாமா: * இங்கு (ப்ரணாமா:) என்று பஹுவசந ப்ரயோகம் பண்ணுவதும், யதிராஜ ஸப்ததியில் * ப்ரணாமம் லக்ஷ்மணமுநி: ப்ரதிக்ருஹ்ணாது மாமகம் * என்று ஏகவசநப்ரயோகம் பண்ணுவதும் வாசியற்றதேயாகும். ஏகவசனத்தைக் கொண்டு ஸக்ருத்த்வத்தையும் பஹுவசனத்தைக்கொண்டு ஆவ்ருத்தியையும் அறுதியிடமுடியாது. ஸக்ருத்ப்ரணாமம் செய்பவர்களுக்கும் காலபேதத்தாலே பஹு ப்ரணாமங்கள் தேறும். ஏகவசனமுள்ளவிடம் ப்ரணாம ரூப க்ரியையைக் காட்டுமதொழிய ஸங்க்யாநியதிநியாமகமாகாது.

9. (ஹயக். 27.) * ஜிகீஷதோ மே கவிதார்க்கிகேந்த்ராந் ஜிஹ்வாக்ரஸிம்ஹாஸநம் அப்யுபேயா: * என்று கவிதார்க்கிக விஜயத்தைப் பலனாகக் கோருவது ஸித்தாந்தஸ்தாபநேச்சையினாலாதலால் நிரவத்யம். * செற்றார்திறலழியச் சென்று செருச் செய்யும் குற்றமொன்றில்லாத * (திருப்பாவை 11) என்றவிடத்து எமது விசேஷவுரை காண்க. [இனி பரமார்த்த ஸ்துதியைப்பற்றி.]

10. திருப்புட்குழி யெம்பெருமான் விஷயமான பரமார்த்தஸ்துதியின் முதல் சுலோகம் மிகவற்புதமானது. எம்பெருமானைக் கல்பவ்ருக்ஷமாகச் சொல்லு

வது எங்குமுள்ளது. திருப்புட்குழியென்னும் திவ்யதேசத் திருநாமத்திற்கேற்ப அங்கொரு பொய்கையுள்ளது. அங்குறையும் போரேற்றுப் பெருமாளைப் பொய் கைக்கரையில் முளைத்ததொரு கற்பகத்தருவாகப் பேசி * யத்ர துங்கை: அதுங்கைச் ச ப்ரணதைர் க்ருஹ்யதே பலம் * என்று ச்லேஷாபிரராமமாக வருளிச்செய்கிறார். உலகத்தில் சில மரங்களில் பழம்பறிக்க உயரமானவர்களே வல்லவர்; சில மரங்க ளுக்கு வாமனர்கள் வல்லவர். இந்த விலக்ஷண கல்பவ்ருக்ஷத்தின்படியோவென் னில், உன்னதர்களும் வாமனர்களும் மிகவும் தாழ்ந்தே பலன்பெறவேண்டும்படியா யிருக்குமென்கிறார். ஜன்மவ்ருத்தங்களினால் மிகவுயர்ந்தவர்களாயினும் அவற்றால் மிகத் தண்ணியவர்களேயாயினும் ப்ரணாம மாத்ரத்தினால் இப்பெருமான் பக்கலில் பேறுபெறக் குறையில்லையென்றதாயிற்று. இது சாடுக்தி.

10. (பரமா. 5.) * அவநம் ச்ரயதாம் அஹிநமாத்யம் ஸ ச தர்மஸ் த்வத நந்ய ஸேவநீய: * என்றவிடத்தில் மேலெழுந்தவாரியாகப் போய்விடலாகாது. நமது யஜுர் வேதத்தில் ஆறாவது காண்டத்தில் “ த்ரிரூ: அஹிநஸ்ய யஜ்ஞஸ்ய” என்றும் “ த்வாதச அஹிநஸ்ய யஜ்ஞஸ்ய ” என்றும் அஹிநஸத்ரமென்று ஒரு யாகவிசேஷம் ஓதப் பட்டுள்ளது, பூர்வமீமாம்ஸையில் மூன்றாமத்யாயத்தில் மூன்றாம்பாதத்தில் இந்த அஹிநஸத்ரவிஷயமான விசாரமுமுள்ளது. இதை நம்முடைய வியாக்கியானத்தின் உதவிகொண்டு நன்குணர்ந்து சுலோகத்தின் கருத்தைச் சுவைத்தநுபவிப்பது.

11, (பரமா. 9.) * புஜகேந்த்ர கருத்மதாதிலப்யை: * இந்த சுலோகத்தின் உத்தரார்த்தம்....“ ஸ்வபதே ரணபுங்கவ ஸ்வயம் மே பரிசர்யாவிபவை: பரிஷ்க்ரியே தா: * என்பதாக புராதனமும் நிரவத்யமுமான பாடம். எப்போதோ பாடவிகாரம் விளைந்திட்டது. மூன்றாம்பாதத்தின் முடிவில் மே என்பது மாமென்று மாறிவிட்டது. முடிவில் பரிஷ்க்ரியேதா: என்று [கர்மணி ரூபமாக] ப்ரயோகித்தருளின ஸ்வாமியின் திருவுள்ளத்தையுணரகில்லாதார் அதை கர்த்தரியாகத் திருத்தப்பார்க்கிறார்கள். இன்னமும் பலவகையான விப்லவங்களும் உபப்லவங்களுமுண்டு. அவற்றில் முசியா தே நமது வியாக்கியானங்கண்டு தெளிவது. [இனி வைராக்ய பஞ்சகத்தைப்பற்றி.]

12. ஸ்வாமியினுடைய வைராக்யம் அவருடைய சரித்திரங்கள் பலவற்றாலும் விளங்குவதுபோல (அல்லது விளங்குவதிற் காட்டிலும்) வைராக்ய பஞ்சகமென்கிற ஐந்து சுலோகங்களினால் அற்புதமாக விளங்காநின்றது. காளிதாஸ கவி * லபேத வா ப்ரார்த்தயிதா ந வா ச்ரியம் ச்ரியா துராப: கதமீப்ஸிதோ பவேத் * என்றார் சாகுந்தல நாடகத்தில். எனக்கு லக்ஷ்மி வேணுமென்று விரும்புமவனுக்கு லக்ஷ்மி கிடைக்காமற்போனாலும் போகும்; லக்ஷ்மி தானே ஒருவனை விரும்பினால் அவனுக்கு லக்ஷ்மி எப்படி கிடைக்காமற் போகும்? என்பது இதன் கருத்து. [ச்ரியா ஈப்ஸித: கதம் துராபோ பவேத்? என்று அந்வயம்.] இது நம்ஸ்வாமி பக்கலில் வ்யபி சரித்துவிட்டது. உஞ்சவ்ருத்தியினாலே தேஹயாத்ரையை நடத்திக்கொண்டு போந்த ஸ்வாமி ராஜஸ்தானத்தில் தமக்குக் கிடைக்கவிருந்த பெருஞ்செல்வத்தை யும் உதறித்தள்ளினது உவமையற்ற வைராக்யமன்றோ.

13. * ந மே பித்ரார்ஜிதம் கிஞ்சித் ந மயா கிஞ்சிதார்ஜிதம், அஸ்தி மே ஹஸ்திசைலாக்ரே வஸ்து பைதாமஹம் தநம் * என்ற ஸ்வாமியின் ஸ்ரீ ஸூக்தி இன்சுவைமிக்கது. உலகில் அவரவர்கள் தாம் ஈட்டும் பொருள் ப்ரயாஸலப்யமா கையாலே த்ருப்தியைத் தாராது. பிதாவின் ஸ்வயமார்ஜிததனம் இருக்குமானால் அதைப் பிதா ஸ்வச்சந்தமாக விநியோகிக்கப் பூர்ணாதிகாரம் பெற்றவராதலால் அதை நியமேந எதிர்பார்க்கப் புத்திரனுக்கு ப்ராப்தியில்லை. இவ்விரண்டுமன்றிக்கே பிதாமஹார்ஜிதமிருக்குமாகில் அதற்குச் சலனமில்லை. இதைத் திருவுள்ளத்திற் கொண்டு “அஸ்தி மே பைதாமஹம் தநம்” என்றருளினது மிக்க சமத்காரம். நான்முகனுக்குப் பிதாமஹனென்று பெயராதலால் அவன் படைத்த பெருஞ்

செல்வம் தேவப்பெருமாள்; அவரிருக்க எனக்கொரு குறையில்லையென்றுராயிற்று.

14. (வரதராஜபஞ்சாசத். 1.) [ந்விரதசிகரிஸிம்நா ஸத்மவாந்] ஸீம்நா என்றது த்ருதீயாவிபக்தி. ஹஸ்திசைல சிகரேண என்றபடி. த்ருதீயையாக இருந்தாலும் (சிகரத்தாலே) என்று பொருள்சொல்லக்கூடாது. சாஸ்த்ரஜ்ஞர்கள் இங்கு "அபே தார்த்தே த்ருதீயா" என்பர்கள். "தாந்யேந தநவான்" என்று இதற்கு உதாஹரணம் காட்டுவர்கள். தான்யத்தினாலே (ஸம்பாதிக்கப்படப்போகிற) தனத்தையுடையவன் என்பது இதற்குப் பொருளன்று. தான்யமாகிற தனத்தையுடையவன் என்றே பொருள். அதுபோல 'திருவத்திமா மலையுச்சியாகிற இருப்பிடத்தையுடையவன்' என்று பொருள்.

15. (அந்தச்லோகத்திலேயே.) [கலசஜலதிகந்யா] கலசமென்று க்ஷீரத்திற்குப் பெயர்; அதன் பக்கத்திலே ஜலத்தைச் சொல்லியிருப்பது எதற்காக? இங்கே பாற்கடல் விவக்ஷிதமேயொழிய நீர்க்கடல் விவக்ஷிதமன்றே; க்ஷீரத்தையும் ஜலத்தையும் சேரச்சொல்லுவது எதற்காக? என்று சிலர் கேட்பதுண்டு. இந்த சங்கையை அவர்கள் 'க்ஷீராப்தி, க்ஷீராம்போநிதி, க்ஷீரபயோநிதி' என்று ஸுப்ரஸித்தமான பதங்களிலேயே பண்ணலாம். அவர்கள் தெளியவேண்டியதாவது - க்ஷீரகலசாதிபதங்களோடு சேர்ந்துவருகிற அப்பு, அம்பஸ்ஸு, ஜலம்....இத்யாதி பதங்களுக்குத் தனிப்பட அர்த்தம் கிடையாது. கடல் என்று மட்டும் பொருள். க்ஷீரகலசாதிபதங்கள் சேர்ந்து பாற்கடல் என்னும் பொருளைத்தருகிறது.

16. (வரதரா. 2.) [யஸ்யாநுபாவதிகந்துமசக்நுவந்தோ முஹ்யந்தி அபங்குரதியோ முநிஸார்வபௌமா:] இதற்குப் பலர் என்ன கருத்துச் சொல்லுகிறார்களென்றால், தேவப்பெருமாளுக்கு ஆழ்வார்களின் மங்களாசாஸனம் கிடையாதென்று தாங்களாக ஒருமுடிவு செய்துகொண்டு இதை தேசிகனும் ஸ்பஷ்டமாக ஸாதிக்கிறார் என்று பீடிகையிட்டு 'ஆழ்வார்கள் தேவப்பெருமாளுடைய பெருமையில் மோஹித்துப்போனபடியாலே வாய்திறந்து பாசுரம்பாட மாட்டிற்றிலர்' என்பதாகப் பொருளுரைத்து வருகிறார்கள். (முநிஸார்வபௌமா:) என்றதற்கு ஆழ்வார்களே பொருளென்பதை மறுப்பாரில்லை; அவர்கள் மோஹித்தார்களென்பதும் இல்லை செய்யத்தக்கதன்று. ஆழ்வார் திருவாக்குக்களில் தேவப்பெருமாள் பாடல் ஸ்பஷ்டமாக விளங்காநிற்க இந்த சுலோகங்கொண்டு அதனை இல்லை செய்யப்போகாதன்றே. பூதத்தாழ்வார் திருவந்தாதியில் * என்னெஞ்சமேயான் * அத்தியூரான் புள்ளையூர்வான் * என்கிற பாசுரங்களும், பெரிய திருமொழியில் * வரந்தரும் மாமணிவண்ணனிடம் * என்கிற பாசுரமும் தவிர கச்சியென்று வருமிடங்களிலெல்லாம் தேவப்பெருமாளை விவக்ஷித்தே தீர வேண்டிய நிர்ப்பந்தமுண்டு; ஏனெனில், காஞ்சீ என்கிற வடசொல்லே கச்சியெனத் திரிந்தது; "க இதி ப்ரஹ்மணோ நாம தேந தத்ராஞ்சிதோ ஹரி:, தஸ்மாத் காஞ்சீதி விக்யாதா புரீ புண்யவிவர்த்திநீ * என்கிற புராணச்லோகத்தின்படி பிரமனால் ஆராதிக்கப்பட்ட தலத்தையேயன்றோ காஞ்சியும் கச்சியுங்காட்டும்.

17. தேவப்பெருமாளுக்கு ஆழ்வார் மங்களா சாஸனமுள்ளதென்பதை தேசிகன் கண்டோக்தியாலும் வெளியிட்டவர்; எங்ஙனேயென்னில்; த்ரமிடோபநிஷத்ஸாரத்தில் * பரத்வாத்யைரித்தம் * என்று தொடங்கும் ஐந்தாவது சுலோகத்தில் * ப்ரதமசதகே வீக்ஷ்ய வரதம் * என்று திருவாய்மொழி முதற்பத்துமுழுதும் தேவப்பெருமாள் விஷயமென்று ஸாதித்தருளினர். இது ஸுஸ்பஷ்டமான உக்தியாதலால் கண்ணழிக்கமுடியாதது.

18. திருவாய்மொழி முதற்பாசுரத்தில் * அயர்வறுமமரர்களதிபதி * என்றிருக்கையாலே அதுமட்டும் தேவப்பெருமாள் விஷயமென்று ஒருவாறு சொல்லப் பொருந்தும்; முதற்பத்துமுழுதும் தேவப்பெருமாள் விஷயமென்று கொள்வதற்கு ஔசித்யமுண்டோவென்று சிலர் கேட்க்கூடும். முதற்பத்தின் முடிவுபாசுரத்தில்

* மணியை வானவர் கண்ணனை * என்றிருக்கையாலே [வானவர் கண்ணன்—தேவாதி ராஜன்] என்று கொண்டு உபக்ரமோபஸம்ஹாரந்யாயத்தாலே * ப்ரதமசநகே விக்ஷ்ய வரதம் * என்றருளிச்செய்தது பொருந்தும்.

19. [வரதராஜபஞ். 7.] * யம் சக்ஷுஷாமவிஷயமித்யாதி.] என்றைக்கோ பிரமனொருவன் செய்த புண்ணியத்தினல் நீண்டகாலம் உலகமெல்லாம் தேவப்பெருமாளை ஸேவித்துக்களிக்கின்றதென்று ஸாதித்தவிதனுல் பண்டிதராஜனுடைய ஒரு சுலோகம் நினைப்பூட்டப்படுகிறது. (அதாவது) * சாதகஸ் த்ரிசதுராந் பய: கணாந் யாசதே ஜலதரம் பிபாஸயா, ஸோபி பூரயதி விச்வமம்பஸா ஹந்தஹந்த மஹதாம் உதாரதா * இதன் பொருளாவது, வர்ஷபிந்துவாலல்லது மற்றொன்றால் அபேக்ஷையற்றதான சாதகபக்ஷி தனக்கு ஸ்வல்பஜல பிந்துக்கள் வேணுமென்று விரும்ப, மேகம் அதன் கோரிக்கையை நிறைவேற்றுவதோடு நில்லாமல் உலகத்தையெல்லாம் வெள்ளம் பரந்ததாகச் செய்கின்றதென்பதாம். சாதகபக்ஷி போன்ற பிரமனொருவனுடைய கோரிக்கையை நிறைவேற்றத் திருவுள்ளம்பற்றிய தேவப்பெருமாள் அவனுக்குமட்டும் காட்சிதந்து மறைந்திடாமல் நீடூழிகாலம் உலகமெல்லாம் வாழத் திருவத்திமாமலையிலே திகழ்கின்றாரென்றபடி.

20. (அதிலேயே. 8.) [நக்தந்தபதைருபஹ்ருதேவி துரங்கமேதே] தேவப்பெருமாளை ஸாக்ஷாத்கரிக்கப் பிரமன் அச்வமேதயாகம் செய்கையில் அக்னியில் ஆஹுதி செய்யப்பட்ட ஹவிஸ்ஸு முழுவதையும் எம்பெருமானைச் சிந்தை செய்துகொண்டு அப்பெருமானுக்கே நேரில் ஸமர்ப்பித்ததனுல் பல பல தேவதைகள் யாகசாலைக்கு நேரில் வந்திருந்தும், "ஸோமாய ஸ்வாஹா, வருணாய ஸ்வாஹா; இந்த்ராய ஸ்வாஹா, ஸூர்யாய ஸ்வாஹா" என்றிப்படி அந்தந்த தேவதைகளை உத்தேச்யர்களாகக் கொண்டு ஹோமம் செய்யப்பட்டபோதிலும், ஒரு ஹவிஸ்ஸும் ஒரு தேவதைக்கும் கிடைக்காமற் போக அதனுல் மிக்க வருத்தங்கொண்ட அத்தேவதைகள் நான்முகனை நோக்கித் தங்கள் வருத்தத்தைத் தெரிவித்து 'இப்படியும் எம்மை அவமானப்படுத்துவது தகுதியோ பிரம!' என்று முறையிட, அவர்களை நோக்கி அயன் 'தேவர்காள்! ஆயுள், ஆரோக்யம், மக்கள், செல்வம் முதலிய அற்ப பலன்களைக் குறித்து வேள்வி புரிகின்றவர்களே உங்களைக் குறித்து யஜிப்பவர்கள்; அன்னவர்களால் ஆஹுதி செய்யப்படும் ஹவிஸ்ஸுகளே உங்களுக்குக் கிடைக்கக்கூடியவை; முமுக்ஷுக்களான பரமைகாந்திகளால் ஸ்ரீமந்நாராயணனே ஸாக்ஷாத்தாக யஜிக்கப்படுகிறபடியால், அன்னவர்களால் அர்ப்பணம் செய்யப்படும் ஹவிஸ்ஸுக்களை ஸாக்ஷாத் பரமபுருஷன் தானே ஸ்விகரித்தருள்வான்; இப்போது அடியேன் முமுக்ஷுவாய்ப் புண்டரீகாக்ஷனையே ஸாக்ஷாத்கரிக்கவெண்ணி யாகஞ் செய்கிறேனென்பதை நீங்களனைவருமறிவீர்; இந்த வேள்வியில் ஹோமம் செய்யப்படும் அவியுணவுகளை அமரர் பெருமான்தானே ஸாக்ஷாத்தாக அங்கீகரித்தருள்கின்றமையால் நீங்கள் இவ்வுணவுகளைப் பெற ஆசை கொள்ள அவகாசமில்லை' என்றுகூற, அமரர்கள் ஸமாஹிதரானார்களென்று ஹஸ்திகிரி மாஹாத்மியத்திலுள்ள கதையை இந்த சுலோகத்தில் சமத்காரமாக அருளிச்செய்தபடி. *ஏததேவ அம்ருதம் த்ருஷ்ட்வா த்ருப்யந்தி* என்ற ச்ருதியையும் திருவுள்ளம் பற்றினபடி.

21. (அதிலேயே. 13) * ஆசாதிபேஷு கிரிசேஷு சதுர்முகேஷ்வபி. * "ச்ருதிஸ் ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா" என்று பகவான்தானே சோதிவாய்திறந்து பணித்தபடியே அவன் தன்னுடைய கட்டளையாயிரா நின்ற ச்ருதிஸ்ம்ருதிகளில் இன்னின்னவற்றைச் செய்யவேண்டியதென்கிற விதிகளும், இன்னின்னவற்றைச் செய்யலாகாதென்கிற தடைகளும் நிரம்பியுள்ளன. இங்ஙனமாகவுள்ள விதி நிஷேதங்களுக்குக் கட்டுப்பட்டு நடக்கவேண்டிய நியதி நமக்கு மட்டுமல்ல; பிரமன் சிவனிந்திரன் முத

லான தேவர்களுக்குமுண்டு; அவர்களும் ஆஜ்ஞையை யநுஸரித்து நடப்பதனுல் நன்மைகளேயும், மீறி நடப்பதனுல் தீமைகளேயும் அடைகிருர்கள் என்கிறது இந்த சுலோகத்தில். இதனுல் அத்தேவர்களுக்கு அவரத்வமேயொழியப் பரத்வமில்லையென்பது விளங்கும். திருவாசிரியம் மூன்ருவது பாட்டில் * ஆணை மெய்பெற நடாய தெய்வம் மூவரில் முதல்வனுகி * என்றருளிச்செய்தது இங்கே அநுஸந்தேயம்.

22. (அதிலேயே. 16.) [ஸஞ்சிந்தயந்தி....சாந்தோதிதம் சமவதா ஶ்ருத்யோந தந்யஃ] பரவ்யூஹவிபவாதி பஞ்சப்ரகாரமான எம்பெருமானது நிலைமைகளில் வ்யூஹநிலையில் நித்யோதிதமென்றும் சாந்தோதிதமென்றும் இரண்டு தசைகள் பகவச் சாஸ்த்ரங்களில் கூறப்பட்டுள்ளன. இவற்றுள் சாந்தோதித தசையை ஆழ்வானும் பட்டரும் தங்கள் ஸ்தவங்களில் எடுத்தாளுகிருர்கள். வரதராஜஸ்தவத்தில் * ப்ரசாந்தாநந்தாத்மாநுபவஜ மஹாநந்தமஹிம ப்ரஸக்த ஸ்தைமித்யாநுக்ருத விதரங்கார்ணவதசம்* என்பது ஆழ்வான் ஸ்ரீஸூக்தி. "....அநந்த ஸ்வவசகந சாந்தோதித தசஃ, த்வமேவ த்வாம் வேத்த ஸ்திமிதவிதரங்கம்" என்பது பட்டர் ஸ்ரீஸூக்தி. இவ்விரண்டு ஸ்ரீஸூக்திகளேயும் நெஞ்சிற்கொண்டு இங்கு சாந்தோதிதம் என்றுமட்டும் அருளிச்செய்தார். அடியேனுடைய வியாக்கியானங்களில் விவரணம் காண்க.

23. (அதிலேயே 18.) [மோஹாந்தகார....த்வத் தேஜஸி த்விரதசைலபதே! விம்ருஷ்டே ச்லாக்க்யேத ஸந்தமஸபர்வ ஸஹஸ்ரபாநோஃ.*] இந்த உத்தரார்த்தத்தின் பொருள் துரவகாஹம். கருத்தை எளிதாக விவரிக்கிறேம். ஸஹஸ்ரபாநுவென்று ஸூரியனுக்குப் பெயர். ஸந்தமஸபர்வ—அமாவாஸ்யை; ஸூர்யனிற்காட்டில் அமாவாஸ்யை கொண்டாடப்படும் என்பது சப்தார்த்தம். இதன் கருத்து ஏதென்னில்; கேளீர். ஒரு வித்வத்ஸதஸ்ஸில் பிரசண்டபண்டிதரொருவர் பேசுகிருர். அவர் பக்கத்தில் அல்பச்ருதரான பண்டிதம்மந்யரொருவர் இருக்கிருர். 'நமக்கு ஒன்றும் தெரியாது; நாம் யதாஜாதர்கள்' என்று தங்களுடைய ஜ்ஞானலவலேச சூந்யதையை உணர்ந்தவர்களும் அங்குள்ளார்கள். ஆக, ஸர்வஜ்ஞரென்னும்படியான யதார்த்தபண்டிதரொருவர், அல்பஜ்ஞனை பண்டிதம்மந்யனெருவன். ஒன்றுமறியாத யதாஜாதனெருவன்—என்று இம்மூவரை மனத்தில் கொள்ளுங்கள். ஸர்வஜ்ஞவித்வான் பேசும்போது பண்டிதம்மந்யனை அல்பஜ்ஞன் வாய்மூடியிருக்கமாட்டாமல், தன்னையும் தத்துல்ய பண்டிதனென்று பிறர் நினைக்கவேணுமென்னுமாசையினுலும், வாளாவிருந்தால் தன்னை அஜ்ஞனுக நினைத்துவிடுவார்களென்னுமத்தாலும் இடையிடையே தான் குசோத்யங்கள்பண்ணி உடனுக்குடனே பங்கப்படுகிருன். யதாஜாதர்களாயிருக்கிற மற்றையோர்கள் உள்ளபடி தங்களை அறிவிலிகளாகவே நினைத்திருப்பதனுல் வாய்மூடியேயிருந்து பங்கப்படாதிருக்கின்றனர். பண்டிதம்மந்யன் பங்கப்படுவதற்கு ஹேது ஸ்வல்பஜ்ஞானமுடைமை. யதாஜாதன் பங்கப்படாமைக்கு ஹேது ஜ்ஞானத்யந்தாபாவம். இதேபோல தேவப்பெருமாளுடைய மிகவுயர்ந்த தேஜஸ்ஸின் முன்னே ஸூர்யன் பங்கப்படுகிருன்; அமாவாஸ்யை பங்கமேதும் அடையாமலிருக்கின்றது. ஸூர்யன் பங்கமடைவதற்கு என்ன காரணம்? தன்னிடத்தில் ஸ்வல்ப தேஜஸ்ஸுடைமையே காரணம். அமாவாஸ்யை பங்கமடையாதிருப்பதற்கு எது காரணம்? தேஜஸ்ஸின் அத்யந்த பாவமே காரணம். ஆகவே அல்பதேஜஸ்கனை ஸூர்யனிற்காட்டிலும் தேஜஸ்ஸின் லவலேசமுமற்ற அமாவாஸ்யையே கொண்டாடப்படுவதாகின்றது என்றதாயிற்று. ச்லாக்க்யேத என்னும் க்ரியைக்கு இப்பொருளில் தவிர மற்று எந்தப்பொருளிலும் பொருத்தம் காணஇயலாது. தேவப்பெருமாளுடைய தேஜஸ்ஸின் உயர்த்தியைப் பூர்வார்த்தத்தில் இரண்டு விசேஷணங்கள் நிலைநாட்டுவதால் நான்காவது பாதத்தில் கூறிய விஷயத்திற்கு அவை உபபாதகங்களாயின. அப்பயதீக்ஷிதர் தாம்செய்த வரதராஜஸ்தவத்தில் * பாநுர் நிசாஸு பவதங்க்ரிஸரோஜசோபாலோபாத் * இத்யாதியான

ச்லோகமிட்டிருப்பது இந்த ரஸ்யமான தாத்பர்யத்தை உட்கொண்டேயாம். [அந்த சுலோகத்தின் முடிவில் (ஸஹிமந்ததாப:) என்று வழங்கிவரும் பாடம் மிகத்தவறு ; "ஸஹி மந்தநாத:" என்று திருத்துக. இது ப்ராஸங்கிகம்.]

24. (அதிலேயே. 43.) [ந்வஞ்சேத் ப்ரஸீதஸி... ஸம்ஸார ஏஷ பகவந் அபவர்க்க ஏவ.] மேலே நாற்பத்தொன்பதாம் சுலோகத்தில் * வைகுண்ட வாஸேபி ந மேபிலாஷ:* என்றருளிச் செய்யப்போகிறாராதலால் இந்நிலமே எமக்கு வைகுண்டமென்கிறாரிதில். இருள் தருமாஞாலமானவிது எப்படி வைகுண்டமாகுமென்ன ; சில கோரிக்கைகளை விண்ணப்பம் செய்கிறார், நான் ஆர்த்ராபராதனாயிருக்கும்போதும் திருமுகத்தில் புன்முறுவல் மாறாதேயிருக்கவேணும் ; அடியேன் போவதும் வருவதுமாயிருக்கையன்றிக்கே ஒழிவில்காலமெல்லா முடனாய் மன்னியிருக்கவேணும் ; மெய்யன்பு கொண்டிருக்கவேணும். இவையெல்லாவற்றுக்கும் மேற்பட பரஸ்பரஹிதைஷிகளோடே கலந்து பரிமாறப் பெறவேணும். இவ்வளவும் வாய்க்கப்பெறில் இம்மண்ணுலகே விண்ணுலகாகுமென்னத் தட்டில்லை என்றாராயிற்று.[ இனி கோதஸ்துதியைப்பற்றி.]

25. (கோதாஸ்துதி-1.) [ஸ்ரீ விஷ்ணுசித்த குல நந்தன கல்பவல்லீம் இத்யாதி.] ஸ்ரீகுணரத்நகோசத்தில் ஸ்ரீரங்கநாச்சியாரைத் துதிக்கப் புகுந்த பட்டர் "அநுகல நநுகாண்ட" இத்யாதியான மூன்றாவது ச்லோகத்தில் ஸ்ரீ மஹாலக்ஷ்மியை ஒரு கற்பகக் கொடியாக வருணித்துப் பேசின கணக்கிலே ஸ்வாமி தாமும் ஆண்டாளைக் கற்பகக் கொடியாக முதலடியிலேயே பேசப்புகுந்தார். கற்பகக் கொடியானது ஸகலார்த்தங்களையும் அளிக்கவல்லது. அதுபோலவே ஆண்டாளும் தனது திவ்யஸூக்திகள் வழியாக ஸகலார்த்தங்களையும் விளங்கச் செய்பவள் என்பது விவக்ஷிதம். தேவேந்திரனுடைய உத்யான வனத்திற்கு நந்தனமென்று பெயர். அங்குத் தான் கற்பகக் கொடி படரும். இவ்வாண்டாளாகிற கற்பகக் கொடியானது *வேயர் தங்கள் குலத்துதித்த விட்டுசித்தன் குடியாகிற நந்தனவனத்தில் தோன்றியதாம். பெரியாழ்வாருடைய திருக்குலம் ஆண்டாள்திருவவதாரத்தினால் மிக்க பொலிவு பெற்றதென்பது கருத்து. கொடியானது ஒரு கொள்கொம்போடே அணைந்தல்லது நில்லாது ; அதுபோல, இக்கோதைக்கொடியும் ஸ்ரீரங்கநாதனாகிற கற்பகத்தருவை யணைந்து விளங்காநிற்கும். "எனக்கே தன்னைத்தந்த கற்பகம்" என்று ஆழ்வார் எம்பெருமானைக் கல்பவ்ருக்ஷமாக அருளிச் செய்திருப்பது காண்க. அமரகோசத்தில் பஞ்சைதே தேவதரவோ மந்தார:, பாரிஜாதக:, ஸந்தான: கல்பவ்ருக்ஷச்ச பும்ஸி வா ஹரிசந்தனம் என்று ஐந்து வ்ருக்ஷங்கள் தேவவ்ருக்ஷங்களாகக் கூறப்பட்டன ; அவற்றுள் ஏதேனுமொன்றைச் சொன்னாலும் ஐந்தும் சொன்னபடியாகுமென்பது கவிமரபு. ("ஸ்ரீரங்கராஜ ஏவ ஹரிசந்தன:- கல்பவ்ருக்ஷ:; தேநஸஹ யோகேந-நித்யஸம்யோகேந த்ருச்யாம்—ரமணீயாம். என்றபடி. * மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன் * என்று உறுதிகொண்டபடியே எம்பெருமானையே கணவனாகப்பெற்றுப் பொலிந்தவளென்றபடி.

26. (அதிலேயே. 2.) இதில் "மௌனத்ருஹோ முகரயந்தி குணாஸ் த்வதீயா:" என்றவிடத்து ஓர் ஐதிஹ்யம் பெரியார் கூறுவதுண்டு. இந்த ஸ்துதிநூல் ஆசிரியரால் ஸ்ரீவில்லிபுத்தூரிலேயேயிருந்து அருளிச் செய்யப்பட்டது. ஸ்வாமி அங்கு த்ரயோதசியன்று எழுந்தருளி ஒரு வீதியில் ஒரு திருமாளிகையில் தங்கியிருந்தார். அன்று ஆண்டாளுடைய திருவீதிப்புறப்பாடு நடந்துகொண்டிருக்கிறது. இவர் எழுந்தருளியிருக்கும் வீதியில் அன்று ஆண்டாள் எழுந்தருளுகிற முறை இல்லை. அன்று மஹாப்ரதோஷமாகையால் மௌநவ்ரதத்தை ஸங்கல்பித்துக்கொண்டு திருமாளிகையிலேயே யெழுந்தருளியிருக்கையில், ஆண்டாளெழுந்தருளவேண்டிய திருவீதியில் அநுபபத்தி விளைய, திடீரென்று இந்த வீதியில் எழுந்தருள நேர்ந்துவிட்டது. அப்போது இவர் மஹாப்ரதோஷ ப்ரயுக்தமான மௌநவ்ரதத்தை ஸஹஸாவிஸர்ஜநம் செய்தருளி இந்த ஸ்துதியை விஜ்ஞாபிக்க உபக்ரமித்தாராயிற்று, அதையே

# ஸ்ரீராமாநுஜன் 101 முதல் 228 வரையில் பிரசுரமாகியுள்ள வியாஸங்களுக்கும் நூல்களுக்கும் அகராதியட்டவணை.

லக்கம்—ஸ்ரீ ராமாநுஜன் வரிசைலக்கம்

ஸ்ரீ



அ

ஸஹஸைவ கோதே! மௌநத்ருஹோ முகரயந்தி குணாஸ் த்வதீயா:*என்கிறவிதனுல் ஸூசிப்பித்தருளினபடி.

27. (அதிலேயே. 5.) [அஸ்மாத்ருசாமபக்ருதௌ சிரதீக்ஷிதாநாம்] இந்த சுலோகத்தின் கருத்தாவது 'கோதாய்! பகவத் பாகவதாபசாரங்களில் நெடுநாளாகவே ஊன்றியிருக்கின்ற என்போல்வார் விஷயத்திலும் எம்பெருமான் சடக்கென அருள் செய்கின்றானே! இதற்கு யாதுகாரணம்? என்று ஆராயுமிடத்து, நீர் சூடிக்கொடுத்த பூமாலையினாலும் பாடிக்கொடுத்த பாமாலையினாலும் அப்பெருமான் வசீக்ருதனாய் விட்டபடியாலே என்று நிச்சயிக்கப்பட்டது என்பதாம். *அன்னவயற்புதுவையாண்டாள் * என்கிற தனியனைப் பெரும்பாலும் அடியொற்றி இந்த ச்லோகத்தின் உத்தரார்த்தம் அமைந்துள்ளது. ஆண்டாள் இரண்டுவகையான மாலைகளினால் எம்பெருமானைக் கட்டுப்படுத்தினள் என்கிறது. 'சூடிக்கொடுத்த நாச்சியார்' என்று தனக்கு ப்ரஸித்தமாக வழங்கும் திருநாமத்திற்குரிய ஐதிஹ்யத்தின்படியும். *ஸ்வோச்சிஷ்டாயாம் ஸ்ரஜி நிகலிதம் யா பலாத்க்ருத்ய புங்க்தே கோதா* என்று பட்டர் அருளிச்செய்தபடியும் தான் சூடிக்களைந்த பூமாலையைத் தந்தும், தொண்டர்க்கு அமுதுண்ணச் சொல்மாலைகளைப் பாடித்தந்தும் ஆக இவ்விருவகையான மாலைகளாலே எம்பெருமானை உகப்பித்து, அவனைத் தன்னளவில் ஸர்வாத்மநா விதேயனாக ஆண்டாள் ஆக்கிக்கொண்டாள்; நம் போன்றவர்கள் யாவரும் பகவத் பாகவதாபசாரங்களில் நெடுநாளாகவே ஒருப்பட்டிருந்தும், ஆண்டாளுடைய பரிகரமாகையினாலே நம் குற்றங்களைக் கணிசியாமல் ஆண்டாள் பக்கலில் உள்ள அன்பே காரணமாக நம்மிடத்திலும் எம்பெருமான் க்ருபைபண்ணும்படியாகின்றது என்றருளிச் செய்தாராயிற்று. கொடியபாவிகளான நாமும், ஆண்டாளுடைய அபிமானத்திலே ஒதுங்கப்பெறில் எம்பெருமானுடைய திருவடிகளுக்குத் தவறாது இலக்காகலாம் என்பது இதில் ஸூசிதம். முக்கியமாக "அன்ன வயற்புதுவையாண்டாள்" என்னும் திருப்பாவைத் தனியனை யநுஸந்தித்துக்கொண்டே இந்த சுலோகத்தையருளிச் செய்தாரென்னத் தட்டில்லை.

28. (அதிலேயே. 6,) * சோணுதரேபி குசயோரபி துங்கபத்ரா* இத்யாதி. இதில், சோணா, துங்கபத்ரா, ஸரஸ்வதி, விரஜா, கோதாவரி, நர்மதா என்கிற ஆறு மஹா நதிகளின் பெயர்கள் பொருளுக்குப் பொருந்த அவலீலையாகத் தொடுக்கப்பட்டது ஓர் அற்புதம். அதற்குமேல், அபிசப்தத்தை ஐந்து விசை பிரயோகித்திருக்குமழகை நோக்கும்போது சோணா அபி துங்கபத்ரா; துங்கபத்ரா அபி ஸரஸ்வதீ; ஸரஸ்வத்யபி விரஜா; விரஜாபி கோதா (கோதாவரீ), கோதா அபி நர்மதா. என்றிங்ஙனே வாக்ய விந்யாஸம் ஸ்வாமிக்கு விவக்ஷிதமென்று தெரியவருகின்றது. இதர கவிகளுக்கு மஹாப்ரயாஸத்தாலும் இங்ஙனே ரசனை அமையாது.

29. (அதிலேயே. 7.) * வல்மீகதச் ச்ரவணதோ வஸுதாத்மநஸ் தே* இத்யாதி, தைத்திரீயயஜுர் ப்ராஹ்மணத்தில் "ச்ரோத்ரம் ஹ்யேதத் ப்ருதிவ்யா:, யத் வல்மீக:" என்று ஓதப்பட்டுள்ளது. இதன் பொருளாவது நிலத்தில் தென்படும் புற்றானது பூமிதேவியின் காது என்றபடி. ஆண்டாள் பூமிப்பிராட்டியின் அம்சமாதலால் பூமியென்றே கொள்ளத் தகுதியுடையவள், ஆகவே புற்று இவளுடைய காதாக ஆயிற்று, புற்றில் நின்றும் தோன்றிய வால்மீகி முனிவர் ஆண்டாளுடைய காதில் நின்றும் தோன்றினவரென்று சொல்வதற்கு உபபத்தி ஏற்பட்டுவிட்டது. இங்ஙனம் உமது காதில் நின்றும் தோன்றிய ஒருவர், கவியரசர் என்று உலகமெங்கும் புகழ் பெற்றிருப்பதும், அவருடைய பிரபந்தமாகிய ஸ்ரீராமாயணம் மதுரமென்று புகழ் பெற்றிருப்பதும் அபலபிக்கவொண்ணாத விஷயங்களாகும். உலகத்தில் ஒருவருடைய காதில் நின்று உண்டான வஸ்துவுக்கு [குறும்பிக்கு] ஓர் அதிசயம் ஏற்படுவது அரிது. உம்முடைய காதின் பெருமையோ லோகவிலக்ஷணமாயுள்ளது. காதினுடைய பெரு

மையே இதுவானல் திருவாக்கின் பெருமையைப் பற்றிப் பேசத்தானுவதுண்டோ? உமது திருவாயோ அரவிந்தம்; அரவிந்தத்தில் மகரந்தம் ஸ்ரவிப்பது ஸஹஜமே யாதலால், மகரந்தம் போன்ற திவ்ய ப்ரபந்தங்கள் உமது திருவாக்கில் நின்றும் தோன்றினவென்பதில் வியப்பு ஒன்றுமில்லை கிடீர், ஸ்ரீராமாயணத்திற்கு ஏற்பட்டிருக்கும் போக்யதையைப்பற்றிச் சிறிது வியக்கவேண்டுமேயல்லது உம்முடைய திவ்ய ப்ரபந்தங்களுக்கு ஏற்பட்டிருக்கின்ற போக்யதையைப் பற்றிச் சிறிதும் வியக்க வேண்டிய ப்ரஸக்தியில்லை என்பது உள்ளுறை. இதனுல், வால்மீகி கோகிலத்தின் சொற்களிலுங்காட்டில் கிளிமொழிக் கோதையின் சொற்களே பரம மதுரங்கள் என்பது பெறுவிக்கப்பட்டது.

30. (அதிலேயே-8.) [பேக்தும் தவ ப்ரியதமம் பவதீவ கோதே!] ஆண்டாள்தான் ஆழ்வார்களுக்கும் வழிகாட்டியாயிருந்தாளென்கிறது இந்தச்லோகத்தில்.(கருத்தாவது,) ஆண்டாளே! உம்முடைய திருத்தகப்பன்மார்களான பெரியாழ்வார் முதலிய ஆழ்வார்கள் உமது வல்லபரான பெருமாளை நீர் அநுபவிப்பது போலவே தாங்களும் அநுபவிக்க விரும்பித் தங்களுடைய பக்தியை அநுராகசைலியிலே மாற்றிப் பேசா நின்றவர்களாய்ப் பலவகைப்பட்ட ஸம்ச்லேஷ விச்லேஷப் பாசுரங்களினுல் தமது திருவுள்ளத்தை ச்ருங்கார ரஸாநுபவசாலியாக ஆக்கிக்கொள்கிறுர்கள் என்பதாம்.

31. ஆண்டாள் இயற்கையில் பெண்ணுய்ப் பிறந்தவள்; புருஷனைப்புருஷர்கள் அநுபவிப்பதிற்காட்டிலும் பெண்டிர் அநுபவிப்பது பாங்குடைத்தாதலால் புருஷோத்தமனை பெருமாளை ஸ்த்ரீரத்னமான ஆண்டாளனுபவிப்பது பாங்காக அமைந்தது. அமையவே, இவளுடைய திவ்யப்ரபந்தத்தில் "ஊனிடையாழி சங்குத்தமற்கென்று உன்னித்தெழுந்த வென்தடமுலைகள்" என்றும், "கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்தொருநாள், தங்குமேல் என்னுவி தங்குமென்றுரையீரே" என்றும் "கொள்ளும்பயனென்றில்லாத கொங்கை தன்னைக் கிழங்கோடும், அள்ளிப் பறித்திட்டவன் மார்பிலெறிந்து என்னழலைத் தீர்வேனே" என்றும் "கொம்மை முலைகளிடர்தீர" என்றும் உள்ள பாசுரங்கள் பொருத்தமாகவும் ஹ்ருதயங்கமமாகவும் விளங்கின. இங்ஙனம் ஆண்டாளைப் போலவே புருஷோத்தமனை நாமும் அநுபவிக்க வேணும், நாமும் பாசுரமிட்டுப் பேசவேணும்-என்று ஆசைகொண்ட ஆழ்வார்கள் என்செய்தார்களென்னில், பரமபுருஷ விஷயத்திலே தங்களுக்குண்டான பக்தியை நாயகவிஷயத்தில் நாயகிகளுக்குண்டாகும் அநுராகத்தின் ஸமாதியிலே அமைத்து, தாங்களும் ஸ்த்ரீபாவனை கொண்டவர்களாகி எம்பெருமானேடு உண்டாகும் ஸம்ச்லேஷவிச்லேஷங்களுக்கு அநுரூபமான பாசுரங்களையும் பேசி, இங்ஙனே தங்களுடைய ஹ்ருதயத்தையும் ச்ருங்கார ரஸைகதாநமாக ஆக்கிக்கொண்டார்கள் என்றதாயிற்று. இத்தால், அநுகாரரீதியிலே அமைந்த ஆழ்வார்களின் பகவதநுபவத்திற்காட்டிலும், தன் இயற்கைக்கு இணங்கினதாகவே அமைந்த ஆண்டாளுடைய பகவதநுபவம் ரஸவத்தரம் என்பது பெறப்படும்.

32. அதில் குரவஸ் த்வதீயா: என்றவிடத்தில் சில விவக்ஷிதங்கள் கேளீர்; இங்குள்ள குருசப்தம் பித்ருபர்யாயம், பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண் பிள்ளை வாழியே! என்று நாடோறும்ஸ்ரீவைஷ்ணவவுலகம் ஸேவிக்கிற வாழித் திருநாமத்தின்படி ஆண்டாள் பெரியாழ்வார் திருமகளென்று ப்ரஸித்திபெற்றிருந்தாலும் ஆழ்வார்கள் பதின்மருக்கும் இவள் ஒரு திருமகள் என்பது பூருவாசாரியர்களின் ஒருமிடமுன திருவுள்ளம். அதையடியொற்றியே ஸ்வாமி இங்கு குரவஸ்த்வதீயா: என்றருளிச் செய்தபடி, மணவாளமாமுனிகளும் உபதேசரத்தினமாலையில் *அஞ்சுகுடிக்கொரு சந்ததி*என்றருளிச் செய்கிறுராண்டாளை; அஞ்சுகுடியென்ற விதற்கு இரண்டு வகையான பொருள் ஏற்கும்; பொய்கையாழ்வார் தொடங்கிப் பெரியாழ்வாரளவுமுள்ள ஆழ்வார்களைக் கணக்கிட்டால் அவ்வாழ்வார்களின் குடி ஐந்து என விளங்கும். எங்ஙனே யென்

